

பட்டுக்கோட்டை பெருநிலக்கிழாரும், தஞ்சை மாவட்ட
நாட்டாண்மைக் கழகத்தலைவரும், சென்னை சட்டமன்ற
உறுப்பினரும் தேசத்தொண்டரும் ஆகிய உயர்திரு
**V. நாடிமுத்துப் பிள்ளை** அவர்கள் மீதியற்றப்பட்ட.

# வாழ்த்துப்பா.

---

மருக்கிளர் பொழில்சூழ் திருக்கிளர் பட்டுக்
கோட்டைமா நகரன், வேட்டுறு மன்பார்க்
காவனை புரியும் அண்ணல், தஞ்சை
மாவட் டத்தின் மாநாட் டாண்மைக்
கழகத் தலைவராய்க் காசினி போற்ற
நன்று ஆண்ட பண்பமர் பெரியன்,
ஓங்கிய புகழ்சால் காங்கிர சினுக்குத்
தொண்டுகள் புரியுந் தூயன், சென்னை
சட்ட சபையின் சதுரப் பாடுடன்
உறுப்பின ராகிய உத்தமன், தெல்லி
சட்ட சபையின் சகமெலாம் புகழப்
பணிபல புரிந்த துணிவுறு முளத்தன்,
ஏழை கட்கே யென்று மிரங்கும்
ஏந்தல்! இயல்பா யிரப்பவர்க் ஈந்தருள்
பெற்றியன்! பெருநிலக் கிழவன், பிறவா

யாக்கைப் பெரியோன் நாக்கலிற் கோயிற்
பரிபா லனம்புரி துரிசிலாக் குரிசில்,
நாடி முத்தெனும் நாமம் பூண்ட
தோன்றல் கல்வி நிலையந் தொன்மைபோல்
மாந்த நிலைவிட இயற்றிய ஏந்தல் !
அரசர் கல்லூரி அமைதியொடு நிலவக்
கருத்துற ஆற்றிய கவினுடைக் கருத்தன்,
வெள்ளி விராலினுக் கள்ளி வழங்கிய
வள்ளற் பெருமகன் ! ஒள்ளிய அறிஞன்
உம்பன் மாமுகன் செம்மையி னார்பான்
சீர் அறம் வளர்த்த தேவியொ டமர்ந்தருள்
ஐயாற் றீசன் அருட்பெருக் கதனால்
வாழியர் பெரிதே மலிவளம் பெற்றே !

**திருவையாறு திருவள்ளுவர் தமிழ் மாணவர் கழகத்தது**

# தோற்றுவாய்.

வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்திற் சிறப்புற்றோங்குவதும், 'நாடென்ப நாடா வளத்தன' வென்று நாயனார் நவின்றமைக் கோரெடுத்துக்காட்டாய் நின்று நிலவுவதுமாகிய சோணாட்டின் கண், 'சோழவளநாடு சோறுடைத்' தென்ற பொய்யாமொழியைத் தோற்றுவித்த வான் பொய்ப்பினும் தான் பொய்ப்பறியா மலைத்தலைய கடற்காவிரியன்னையின் வடமருங்கில் வானுறவோங்கி நிற்கின்றது எங்கள் அரசர் கல்லூரி. அட்டைப்படத்தில் நீங்கள் கண்டு மகிழும் வடமொழி வெள்ளமுந் தீந்தமிழ்ப் பெருக்குங் கலக்கின்ற கூடலெனத் திகழும் இக்கட்டிடம் செந்தமிழ் நாட்டின் குன்றாச் சிறப்பாய் நின்றிலங்குந் திருக்கோயில்களையும் கலைக்கோயில்களையும் போன்ற தொன்றே. தஞ்சை மாநில வேந்தரின் உயர்வுள்ளுதலும் இன்கலைக் காதலும் இவ்வாறுயர்ந்த கட்டிடமாகவும் மொழிக்கலைக் கல்லூரியாகவும், புறத்தோற்றத்திற் காட்சியளிக்கின்றன. இவ்வேந்தருட் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர், கலையின்பா லளவிலாக்காதலும், எஞ்ஞான்றும் வற்றா அருளுள்ளமும், தஞ்சைக் கலைமகள் நூல்நிலையத்தைத் தோற்றுவித்தவருமான 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த மராட்டிய மன்னராம் அரசர் பெருந்திரு சரபோசியாவார்.

இக்கல்லூரியின் வரலாற்றை நோக்கின் இதன் தொன்மை விளங்காநிற்கும். 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்பதன் உண்மையை உணர்ந்த தஞ்சை மாமன்னர்கள் பலர், உரத்தநாடு, நீடாமங்கலம் போன்ற பல்வேறிடங்களில் பசிப்பிணி போக்க கணக்கில் அன்ன சத்திரங்கள் கட்டியும், அவற்றின் வாயிலாக ஏழைகள் பலருக்கு அறியாமைப் பிணி போக்க எழுத்தறிவித்தும், அவருடற்குறும் பிணிபல போக்க மருத்துவர்களை நியமித்தும் வந்தனர். ஆதுலர்க்கன்னமளிக்குமிடங்களாகவும் ஓதுனர்க்கு மறைகளை ஓதுவிக்கும் பாடசாலைகளாகவும் விளங்கிவந்த இவை 1880-ம் ஆண்டில் திருவையாற்றில் ஓர் பெரும்பள்ளியாக உருவெடுத்தன.

அப்பால் 1910-ஆம் ஆண்டிற் சென்னைப் பல்கலைக் கழகத்தோடு இணைக்கப்பட்டுக் கீழ்த்திசைக் கல்லூரியாக மாற்றப்பட்டது. அன்று முதல் 1924 வரை வடமொழிப் பிரிவில் மீமாம்சை, நியாயம், வியாகரணம், சாகித்யமாய கலைகளும், வடமொழி தென்மொழியாய இரு மொழிகளுமடங்கிய B-வித்வான் பிரிவுங் கொண்டிலங்கிற்று. 1924-ஆம் ஆண்டு முதல் கல்லூரி வகுப்பிற் சேர்வதற்கு வாயிலாகப் புகு முக மிறுதியான கீழ் வகுப்புகளும், தமிழிற் பெரும் பகுதியும் ஓர் பகுதி வடமொழியுங் கொண்ட வித்துவான் C-பிரிவு வகுப்பும் தோன்றின. 1927-28-ஆம் ஆண்டில் காலஞ்சென்ற செந்தமிழ்ச் செல்வர் சர் திரு. A. T. **பன்னீர்ச்செல்வமவர்கள்** தஞ்சை மாவட்டத் தலைவராயிருந்த ஞான்று செய்த முயற்சியின் பயனாய் வித்துவான் D-பிரிவு என்றழைக்கப்படும் தனித்தமிழ் வித்துவான் வகுப்பு தோற்றுவிக்கப்பட்டது.

அடுத்த ஆண்டில் நம் பைந்தமிழ் நாட்டிற்கு வான்புகழ் தேடித்தந்த வள்ளற் பெருந்தகையாந் தெய்வப்புலவர் திருவள்ளுவர் பெயரைத்தாங்கி ஓர் நற்றமிழ்க் கழகம் இவணெழுந்தது. அதுவே இன்று 25 ஆண்டுகள் நிரம்பிய **திருவள்ளுவர் தமிழ் மாணவர் கழகம்** எனத் திகழ்கின்றது. தமிழ் நாட்டின் பல்வேறு பகுதிகளில் இன்று தமிழறிவு பரப்பிவரும் புலமையும் தலைமையும் வாய்ந்த நல்லிசைப் புலவர்களை நாவலர்களாக ஆக்கியது இக்கழகமே. இனியும் இறையருளாற் பல பாவலர்களையும் நாவலர்களையும் தமிழகம் போற்ற இக்கழகம் ஆக்கித் தந்துகொண்டிருக்குமென் பதில் ஐயமில்லை.

மனிதன் மகிழ்ந்து பெறுதற்குரிய பொருள்களுள் வெள்ளியும் பொன்னுந் தலைசிறந்தனவாம். எங்கள் கழகமும் இதற்கு விலக்கல்ல. விடியலில் வெள்ளி முளைக்கின்றது. பின்னர் உலக முவப்பப் பலர் புகழ் ஞாயிறு பொற்கதிர்களைப் பரப்புகின்றது. இந்நாள் ஓர் நன்னாள். எங்கழகத்திற்கின்று **வெள்ளி விழா.** இனிக் கதிரவன் தோன்றும் நேரம். பொழிலில் எழில்மிகு பூக்கள் மலரும் நேரம். இதோ மலர்கின்றது எம் **வெள்ளி விழா மலர்.**

மலரிலே தான் எத்துணை வண்ணங்கள்! எத்துணை மணம் எத்துணை இனிமை! இம்மலர் தன்னிடத்திற் பொங்கி வழியும் இன்பத்தேனைப் பருகுவதற்குரிய பாவலர்களை நாடுகின்றது.



கல்லூரித்தலைவரும் கழகத்தலைவரும்



வெள்ளி விழா—ஆசிரியர் குழு.

மலரை உள்ளத்திற் சூடும் அருந்தமிழ்க் காதலர்களை ஆவலுடன் நோக்குகின்றது. மலரைப்பறித்து இதழ்களை விரித்து நறு மணத்தை நுகரும் சிற்றிளஞ் சிறுர்களைப் பார்த்துச் சிரிக்கின்றது.

தமிழணங்கின்குளிற் சூட்டப்பட்ட இம்மலர் இனித்தமிழ் நாட்டின் உரிமைப் பொருள்.

வாழிய செந்தமிழ்.

பெ. திருஞானசம்பந்தன் M. A., L. T.
கல்லூரித் தலைவர்.

---

# வளமார் எமது வள்ளுவர் கழகம்.

---

செவிலித் தாயன்ன ஓம்பும் தீம்புனற் பொன்னி பாய்தலின் வளம்பல நிறைந்து சோறுடைத்தெனப்படும் சோணாட்டகவயின் காவிரியின் நன்னீரலைகள் முத்தமிட விளங்கும் ஐயாற்றின் கண் அரசர் கல்லூரியதனில் தோற்றங்கொண்ட இக்கழக வரலாறு கூறப்புகின் அதனிற் சிறப்புற இடம் பெறத்தக்கவர் மூவர் ஆவர். அவர்கள் மராட்டிய மன்னர் சரபோஜி, பன்னீர்ச்செல்வம், தமிழ வேள் உமாமகேசுவரனார் ஆகியோர் ஆவர்.

**தண்டா ஈகை தகைமாண் புரவலர்.**

மன்னர் சரபோஜி பல்கலை வல்லவர். அறந்தெரிகோலர். கூட்டுமுறை காணும் நாட்டங் கொண்டவர். பல்வகைப் பண்புகள் பாங்குறக் கொண்டவர். அவர் செல்வத்துப் பயனே ஈதல் என் னும் ஏற்றந்தரு முறையினை யறிந்து இனிய பலஅறங்கள் செய்து இம்மைப் பயனும் இசையினை ஏற்றூர். அன்னசத்திரம் பலஅமைத் தார். அதனினும் ஆங்கோர் ஏழைக்கெழுத்தறிவித்தல் ஏற்ற முடைத்து என்பதை ஊற்றமாகக் கொண்டார். கல்லா நெஞ்சின் னில்லான் ஈசன் என்ற கருத்தை உணர்ந்தேபோலும் கல்வி பயில் மக்களை மாண்புறச் செய்ய- நாடு நாகரிகம் பெற- பண்பாடு ஓங்க- ஐயாற்றிலே அரசர் கல்லூரியெனும் அரும்பெயர்பூண்ட "கல்யாண

மகால்" அறநிலையத்தைத் தோற்றுவித்து, அஃது அறநெறி திறம் பாது ஆற்றுதற்குப் பெரும் பரப்புடைய நிலங்களை உறுபொருளாக அமைத்தார். அதனால் இன்றும் மாணவர்களுக்கு உண்டியும், உறையுளும் கல்வியும் இலவசமாக அளிக்கப்பட்டு வருகின்றன. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரன்றோ! அவ்வுயிர் நன்னிலையுற நாட்டங்கொண்டே கல்வி கற்பிக்குங் கண்ணோட்டங் கொண்டு பல்வேறு பள்ளிகளை பாங்குற நிறுவினர் போலும்.

1880 முதல் 1910 வரை இக்கல்யாணமகால் மறையோதும் இடமாக இருந்தது. பின்னர் சென்னைப் பல்கலைக் கழகத்துடன் இணைக்கப்பட்டது. தஞ்சை மன்னன் சரபோஜி ஒவ்வொரு துறையிலும் கலப்புமுறை கண்டதுபோல் பல பெருந்தகையார்களது பெருமுயற்சியால் வடமொழியும், தமிழும் கொண்ட வகுப்புகளாக நடைபெற்று வருகின்றன. இதன் பொறுப்பு முறையே சரபோஜியாலும், ஆங்கிலேயராலும் மேற்கொள்ளப்பட்டு, இன்று உயர்திரு. V. நாடிமுத்துப் பிள்ளை அவர்களைத் தலைவராகக் கொண்ட தஞ்சை மாவட்டக் கழகத்தாரால் கண்காணிக்கப்பட்டு வருகின்றது.

### மன்னிய பெரும்புகழ் பன்னீர்ச்செல்வம்.

மன்னர் சரபோஜி அமைத்த அறநிலையங்கள் நன்முறையில் இயங்கிவர—மக்களின் பொது நலனுக்குப் பயன்பட—பெரிதும் முயன்றவர் நம் பன்னீர்ச்செல்வம் அவர்கள் ஆவர். அன்னாரது பெருமுயற்சியால் இங்கு தனித்தமிழ் வித்துவான் வகுப்பு ஏற்படலாயிற்று. இவரை அறியாதாரிலர். மன்னரும் மதிக்க மன்னிய பெரும் புகழொடு வாழ்ந்தவரான இவரது தொண்டினைப் பெரிதும் பாராட்டும் கடப்பாடுடையது இக்கழகம்.

### பைந்தமிழ் வளர்த்த பாவலர்.

"தென்றலில் குளிரா இல்லை? தோப்பினிலே நிழலா இல்லை? தணிப்பரிய துயரமிது தமிழகத்துத் தெருதனிலே தமிழ்தானில்லை" என்னும் இழிநிலை நீங்க, தமிழ் உயிர்ப்பு தன்னுள் நிலவ, தமிழது-தமிழரது உயர்வே தமதுயர்வெனக்கொண்டு, இடைவிடா உழைப்பொடு வாழ்ந்த உயர்திரு. தமிழவேள் உமாமகேசுவரனர் அவர்கள் தமிழ்ப் பகுதி தோன்ற பன்னீர்ச்செல்வம் அவர்களுக்கு உறுதுணையாக அமைந்தவராதலின் இவரும் கழக வரலாற்றிலே பொன்போற் பொதியப்பட வேண்டியவர் ஆவர்.

## கழகத் தோற்றம்.

இக்கல்லூரிக்கு வித்திட்டவர் சரபோஜி. அதன் வளர்ச்சி வளம் பெறற்கு உணர்வு நீர் பாய்ச்சி ஊக்கமெனும் எருவிட்டு வளர்த்தவர் நம் பன்னீர்ச்செல்வம் அவர்கள் ஆவர். பின்னர், கலை தெரி கல்லூரிகளில் மாணவர்களிடையே சொல்வன்மையைப் பெருக்குதல் வேண்டும் என்னும் எண்ணம் தலைப்பட்டபோது ஆங்காங்கு சொற்பெருக்கு மேடைகளும் கழகங்களும் தோற்றங் கொள்ளலாயின. இம்முறையினைக் கொண்டே இத்தமிழ் மாணவர் கழகமும் தோன்றியது. பின்னர், தமிழின் உயர்வுக்குக் காரண மான ஒருவரின் பெயரைத் தாங்குதல் ஏற்புடைத்தென்றெண்ணி, நம் தாய்மொழியாம் தண்டமிழ் மொழியில், வாழ்வியல்—அரசியல் ஆகிய அனைத்தினும் ஒப்பிய கருத்துக்களைச் செப்பமுடன் எடுத்துக் கூறுகின்ற—யாவரும் போற்றும் வண்ணம் உலகப் பொது மறையாய் விளங்குகின்ற—திருக்குறளை ஆக்கித்தந்து வான்புகழ் கொண்ட தெய்வப் புலவர் திருவள்ளுவர் பெயரைத் தாங்கி திருவள்ளுவர் தமிழ் மாணவர் கழகம் என்ற பெயரால் 1928-ம் ஆண்டு சூலைத்திங்களில் பதினொன்றும் நாள் இக்கழகம் முழு உருப்பெற்றது.

இக்கழக மென்னும் கொடி கல்லூரி மரத்தினடியிலேயே ஊன்றப்பட்டு, அம்மரத்தினையே தனக்கு கொழுகொம்பாகக்கொண்டு வளர்ந்து வருகின்றது. ஒரு சில உறுப்பினரைக்கொண்டு நிறுவப் பட்ட இக்கழகம் இன்று மிகப்பல உறுப்பினரைக்கொண்டு திகழ் கிறது. எம் கழகம் தந்த பயன் நவிலுந்தரமன்று. நாளொரு புதுமையும் பொழுதொரு பொலிவுங்கொண்டு வளரும் இக் கழகம் இன்று இருபத்தைந்தாண்டுகள் நிரம்பப் பெற்ற கட்டி ளங்காளையென மிளிர்ந்து செயற்கரும் பணிகளை முடித்து வந்துள்ளது.

## செயற்குழு.

கல்லூரித் தலைவர் கழகத் தலைவராவர். மூன்றும் யாண்டு பிரதிநிதியே செயலாளர் ஆவார். புகுமுக வகுப்பு முதல் இறுதிநிலை வகுப்பு ஈருக ஒவ்வொரு வகுப்புகளிலும் மாணவர்களால் தேர்ந் தெடுக்கப்படும் பிரதிநிதிகளே செயற்குழுவினர் ஆவர். தமிழ்ப்பகுதி மாணவர் அனைவரும் கழக உறுப்பினர் ஆவர்.

## கழகக் கொள்கைகள்.

1. வள்ளுவர் வாய்மொழியின் உயிரொளியே ஒருமைப்பாடு என்றுணர்தல், உணர்ந்த பின் அதன் வழி ஒழுகல்.

2. மாணவர்களின் சொல்வன்மையைப் பெருக்குவதற்கு வெள்ளிக்கிழமைகள் தோறும் கூட்டங்கள் அமைத்தல்.

3. நாடு, மொழி ஆகிய துறைகளில் உழைத்த பெரியார்களுக்கு நினைவு நாட்கள் கொண்டாடுதல்.

4. அக்கூட்டங்கட்கு பல அறிஞர்களை அழைத்தல்.

5. தக்கார் அனைவருக்கும் வரவேற்பிதழ் அளித்து அவர் தம்மைப் பெருமைப்படுத்தல்.

6. மாணவர் பொது அறிவு பெற நூல்நிலையம் அமைத்து அதன் கண் செய்தித்தாளும், வார ஏடும், திங்கள் இதழ்களும் தருவித்தல்.

7. கழகச் செலவுக்கு மாணவர்களிடமிருந்து கட்டணத்தொகை மூலம் பொருள் பெற்று கழகநிதி அமைத்தல்.

8. நாவன்மை, பாவன்மை, இசைநலம், எழுத்து வன்மை—ஆகிய துறைகளில் பயிற்சியுடையவர்கள் ஊக்கம் பெறும் பொருட்டு ஒவ்வொன்றிலும் போட்டிகள் அமைத்தல்.

9. திருக்குறளில் தனிப்புலமை பெற தேர்வு நடத்துதல்.

10. மாணவர்களிடையே ஒருமைப்பாடு உண்டாக்குதல்.

இக்கல்லூரியைச் சார்ந்து சரபோஜி மன்னர் பெயரைத் தாங்கி சரபோஜி சாரணர்குழு ஒன்று இயங்கி வருகின்றது. இதில் இன்னலுற்றோர்க்கு அளிக்கப்படும் முதலுதவிகளும் பொதுப்பணிகள் பலவும் கற்பிக்கப்படுகின்றன.

மாணவர்கள் கட்டமைந்த உடலுடன் விளங்க உந்து பந்து (Volley ball), பூப்பந்து (Badminton), சுவற்றடி பந்து (Wall Tennis), வளையப்பந்து (Ring Tennis) ஆகிய உடற்பயிற்சி விளையாட்டுகள் இங்கு அமைந்துள்ளன. ஒவ்வொரு பகுதியிலும் வெற்றி பெறுவோருக்கு வெள்ளிப் பதக்கமும், சான்றிதழ்களும் வழங்கப் படுகின்றன.

## இசை வகுப்பு

இசையின் மென்மைக்கு வயப்படாதோர் எதற்கும் உருகார் அன்றோ ! ஆதலால் கல்லூரியின்கண் மாவட்டக் கழகச் செலவில் தேவாரத் திருப்புகழ் இசை வகுப்பு நடத்தப்பட்டு வருகின்றது. இதில் மாணவர்களுக்கு தமிழ்ப் பண் முறையினையொட்டி இசை பயிற்றுவிக்கப்படுகின்றது.

இத்துடன் ஆண்டுதோறும் ஆண்டுவிழாவின்போது வரலாறு, இலக்கிய சம்பந்தமான நாடகங்கள் நடிக்கப்பட்டு, மக்கள் மனத்துள்ள மாசெண்ணங்களை யகற்றி, உண்மை நிகழ்ச்சிகளை நிலை நிறுத்தி வருகின்றது.

இன்னோரன்ன பல துறைகளிலும் கடந்த இருபத்தைந் தாண்டுகளாக வெற்றியுடன் விளங்கி பல தமிழ்ச் செல்வர்களை தமிழகத்துக்கு ஈந்து மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கிறது இக் கழகம். பல அறிஞர்களை உருவாக்கவும் இனி தயங்காது. கழக வரலாற்றின்கண் சோர்வகற்றி, புத்தொளி எத்திக்கினும் வீசித் திகழ தமிழன்னை அருள் புரிவாளாக !



# கழக முன்னேற்ற அறிக்கை.

| ஆண்டு | கழக வளர்ச்சி | தலைவர் | செயலாளர் |
|---|---|---|---|
| 1928–29 | 1 | உயர்திரு வேதாந்தம் ஐயங்கார் M. A. | குஞ்சிதபாதம் |
| 1929–30 | 2 | " | |
| 1930–31 | 3 | " | |
| 1931–32 | 4 | " | |
| 1932–33 | 5 | வித்யாரத்ன P. S. சுப்பிரமண்ய சாஸ்திரி | |
| 1933–34 | 6 | " | |
| 1934–35 | 7 | " | |
| 1935–36 | 8 | " | சண்முகதேசிகன் |
| 1936–37 | 9 | " | அ. கணபதி |
| 1937–38 | 10 | " | |
| 1938–39 | 11 | " | K. A. கிருட்டினன் |
| 1939–40 | 12 | " | சுப்பையா |
| 1940–41 | 13 | " | கு. சின்னையன் |
| 1941–42 | 14 | " | D. சிவசங்கரன் |
| 1942–43 | 15 | உயர்திரு வேதாந்தபாஸ்கர வித்யாபூஷண B.N. கிருஷ்ணமூர்த்தி சர்மா M. A., Ph. D. | G. சாமிநாதன் |
| 1943–44 | 16 | " | ஹாஜி அப்துல் காதிர் ஜமாலி |
| 1944–45 | 17 | " | வேணுகோபாலன் |
| 1945–46 | 18 | " | க. முருகையன் |
| 1946–47 | 19 | " | P. ஆறுமுகம் |
| 1947–48 | 20 | " | N. தியாகராசன் |
| 1948–49 | 21 | " | R. K சச்சிதானந்தசிவம் |
| 1949–50 | 22 | உயர்திரு பெ. திருஞான சம்பந்தம்பிள்ளை M.A.L.T. | த. முருகையன் |
| 1950–51 | 23 | " | நா. இராமராசன் |
| 1951–52 | 24 | " | ச. முத்துக்குமரசாமி |
| 1952-53 | 25 | " | அ. துரைராசன் |

**அ. துரைராசன்,**
மூன்றாம் ஆண்டு
செயலாளன்.

---

# சரபோசி வாழ்க்கை வரலாறு.

——o——

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று"

என வள்ளுவர் அருளிய வாய் மொழியே மண்ணுலகத்தில் மக்களாய் பிறந்ததன் பயன் ஆகும் நெறி. அந் நெறியிலே புகழுக் கேதுவாய குணத்தோடு பிறந்தவர் சரபோசி. தஞ்சை மாநகரை ஆண்ட மகாராட்டிர மன்னர்களில் ஒருவர் நம் சரபோசி. ஏகோஜி மகாராட்டிர நாட்டை ஆண்டுவந்த சிவாசி (Shivaji the Great) மன்னருடைய உடன் பிறந்தார். கி. பி. 1674ல் இவர் தஞ்சையில் மகாராட்டிர அரசைத் தோற்றுவித்தார். அக்காலம் முதற்கொண்டு தஞ்சையை மகாராட்டிர மன்னர்கள் ஆளத் தொடங்கிவிட்டனர். ஏகோஜிக்குப் பின் தஞ்சையை ஆண்ட மன்னர்களிலே ஒருவர் துளஜாஜி என்பவர். இவர் மக்கட் பேறு இல்லாமையால் தமக்குள்ள குறையை நீக்கி மன்னிய மன்னராட்சி தருவான் வேண்டி சரபோசியை சுவீகாரம் செய்துகொண்டார். அதுபோழ்து அவரிட்ட பெயரே சரபோசி என்பது. சரபோசி என்ற பெயரிலே தஞ்சையை மூன்று மன்னர்கள் ஆண்டதால் இவர் நான்காவது சரபோசி என வரலாற்று ஆசிரியர்களால் அழைக்கப்பட்டார். சரபோசி கி. பி. 1798 முதல் கி. பி. 1832 வரை 34 ஆண்டுகள் ஆட்சி செய்தார்.

இவர் இளமையிலே தன்னலமற்ற துறவியாகிய கெர்ரிக், ஸ்குவார்ட்ஸ் (Schwartz) என்ற பாதிரியார்களிடம் கல்வி பயின்றார். பிறர்க்கென முயலும் இப்பெரியார்களின் கூட்டுறவினாலே இவர் "இனத்தானும் இன்னான் எனப்படுஞ்சொல்" என்ற வள்ளுவர் வாக்கிற் கிலக்காக இலங்கினார். கலைகள், பல் வேறு நாட்டு நாகரிகங்கள், கீழ்நாடு, மேல்நாடு, வேறு எந்நாடாயினும் அவற் றுள்ள நற்பகுதிகளை எல்லாம் ஒன்றுபடுத்தி ஒரு சிறந்த நாக ரிகத்தை நிலைநாட்ட வேண்டுமென்ற குறிக்கோளைக் கொண்டிருந் தார். வடமொழி, தமிழ், தெலுங்கு, உருது, ஆங்கிலம், மராட்டி முதலிய மொழிகளில் இவருக்குப் புலமை யுண்டு. பிரஞ்சு, செர்மன், டச்சு, கிரீக், லத்தீன் ஆகிய மொழிகளிலும் இவருக்கு

பயிற்சி உண்டு. மற்றும் இசை, மருத்துவம் முதலிய கலைகளில் நல்ல திறமை யுண்டு. "பலகலைகளுணர்ந்த தஞ்சைச் சரபேந்திர பூபதி" என இவரைப்பாராட்டுகின்றது இவர் மீது பாடப் பெற்ற குறவஞ்சி நாடகம்.

துளஜாஜி சரபோசியை சுவீகாரம் செய்துகொண்டபின் அவரைத் தஞ்சை நகரில் தக்காரிடம் ஒப்படைத்தார். துளஜாஜிக்குப் பின் தஞ்சை நகருக்கு அன்னுருடைய காமக் கிழத்தியின் மகனை அமரசிம்மரை மன்னராக்க முயன்றனர் சிலர். கி. பி. 1786-ல் அரசர் துளஜாஜி இறந்தபோது அவர்கள் செய்த சில சூழ்ச்சிகளால் அமரசிம்மர் 1787-ல் அரசரானர். அக்காலத்தில் தஞ்சையில் இருந்த "ஸ்குவார்ட்ஸ்" என்னும் பாதிரியார் தஞ்சை நகரை ஆளும் உரிமையுடையவர் சரபோசியே என்பதை அறிந்து, அவ்வுரிமைக்குரிய நியாயங்களை கிழக்கிந்திய கம்பெனியாரிடம் எடுத்துரைத்து அவரை அரசராக்கப் பெரிதும் முயன்ருர். முயற்சி உயர்ச்சி அளித்தது. அதன் பயனய் கி. பி. 1798-ல் சரபோசி தஞ்சை நகர மன்னரானர். இவர் தஞ்சை நகரை மன்னர் என்ற பெயரால் ஆண்டது ஓராண்டுதான். 1799-ல் தஞ்சை நகர ஆட்சி யுரிமையை கிழக்கிந்திய கம்பெனிக்குக் கொடுத்துவிட்டு கோட்டையின் உரிமை ஒன்றுமே இவர் கொண்டார்.

இவருடைய குலம் போசல குலம் ஆனலும் இவர் கொண்டொழுகிய நெறி சிவநெறி ஆகும். திங்களை முடியில் அணிந்து திருநீற்றை உடல் முழுதும் பூசி விளங்கும் சிவபெருமானைக் குல தெய்வமாகக் கொண்டமையானும், செஞ்சுடர் எழுமுன் எழுந்து புனல் படிந்து சிவபூசை செய்யும் பெற்றியினர் எனக் குறவஞ்சி நாடகம் கூறும் கூற்றுனும், தஞ்சையில் உள்ள விண்ணளாவிய கண்ணுதற் பெருமான் கோவிலைப் பல வகையில் செப்பம் செய்து, கோவிலுக்கு வேண்டுவன அளித்து அவ்விறைவனை வழிபட்டமையாலும், காசி சென்று கங்கை படிந்து விசுவநாதரை வணங்கி வழிபட்டமையானும் இவர் கொண்டொழுகிய சமயம் சைவம் ஆகும்.

தாமரை மலர சூரியன் தேவை, அல்லி மலரச் சந்திரன் தேவை. அதைப்போல நாட்டு மக்களின் உள்ளம் மலர்ந்து உயர்வடைய கல்வி தேவை. இந்தத் தேவையை அறிந்தார் சரபோசி. அதன் பயனக தமிழ், வடமொழி, தெலுங்கு, மகாராட்டிரம் முதலிய

பலமொழி நூல்களைத் தொகுத்து ஒரு நூல் நிலையம் அமைத்தார். அந்நூல் நிலையம் "சரசுவதி மகால்" என்ற பெயருடன் இன்றும் தஞ்சை அரண்மனையிலே உள்ளது. அந்நூல் நிலையத்தில் உள்ள சுவடிகள் 22000 என்றால் மக்களின் கல்வி உயர்வுக்காக உழைத்த இம்மன்னர் பெருமை விளங்கும். ஓலைச் சுவடிகளிலே உள்ள வற்றை காகிதத்தில் அச்சடித்துப் பலப்பல படிகளாக்கி எல்லோர்க் கும் பயன்படச் செய்யவேண்டும் என்ற ஆர்வத்தால் கற்களால் எழுத்துக்கள் தயார் செய்து அதனால் ஆகிய ஒரு அச்சியந்திர சாலை ஏற்படுத்தினார். மற்றும் இவர் ஒரு காட்சிசாலை (Museum) அமைத்து பல காலங்களிலே உருப்பெற்ற நாணயங்களை ஒன்றாகச் சேர்த்து வைத்திருந்தார். "பரிக்கா னகுல னெங்கள் சரபேந்திர பூபதி" என்று ஒரு புலவர் கூறுவதிலிருந்து இவர் குதிரைகளின் இலக்கணங்களை அறிந்தவர் என்பது பெறப்படுகின்றது.

பழவினையாலும், காரணத்தாலும் மக்கட்கு வரும் நோய் களைத் தீர்ப்பான் வேண்டி "ஆரோக்கியசாலை" என்ற பெயரால் மருத்துவ மனை ஒன்று நிறுவினார். நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்ப மருத்துவம் செய்யும் பண் புடைய ஐயாக்கண்ணுப் பிள்ளையை அம்மனைக்குத் தலைவராக்கினார். சரபோசி மருத்துவர்களையும், புலவர்களையும் ஒன்று கூட்டி மருத் துவ முறைகளைச் செய்யுள் நடையில் பாடச்செய்து அப்பாக்களைப் பல நூல்களாகத் தொகுத்துள்ளார். அவை 'சரபேந்திரர்வைத்தியம்' என்ற பெயருடன் உள்ளன. இவர் இசைப் புலவர்களையும், தமிழ் வடமொழிப் புலவர்களையும், மருத்துவர்களையும், பல்லாற்றானும் சிறப்புச் செய்தார். இதனால் இவர் காலத்தில் புலவர்கள் கவலை யின்றி வாழ்ந்தனர் நிலநூல் பயிற்சியிலே இவருக்கு மிகுந்த ஆர்வம் இருந்து வந்தது. 'இராயல் ஏஷ்யாடிக் சொசைட்டி', 'ஆங்கில நாட்டு ராயல் ஜியோகிராபிகல் சொசைட்டி' ஆய நிலக் கலைக் கழகங்களிலே இவர் உறுப்பினராக இருந்தாரென்பது குறிப் பிடத்தக்கதாம். பள்ளிச் சிறுவரும் நில நூல் அறிவுபெற வேண்டி இவரே மாராட்டி மொழியில் ஒரு நூல் இயற்றினார். அது "தேவேந்திர குறவஞ்சி" எனப்படும். தமிழ்நாட்டுக் குறத்தி ஒருத்தி உலகமெலாம் சுற்றி தேவேந்திர உலகத்தை யடைந்து இந்திரனுக் குக் குறி சொல்லுகிறாள். ஒவ்வொரு கண்டத்திலும் ஒவ்வொரு நாட்டிலும் தான் கண்ட காட்சிகள், மலைகள், காடுகள், ஆறுகள், வளப்

பங்கள், மக்கள் மொழி, அவர் தம் வாழ்க்கை முறை ஆகிய எல்லாவற்றையும் இந்திரனிடத்திலே கூறுகின்றுள் இந்தக் குறத்தி. இதைப் படிக்கும் மாணவர்கள் எளிதிலே உலகத்தை உணர்வார்கள். என்னே இவரது மக்கள் அறிவு வளர்ச்சியிலே கொண்டுள்ள ஆர்வம்!

சரபோசி சேதுபாவா சத்திரம், சாளுவ நாயக்கன் பட்டினம் என்னுமிரண்டிடங்களில் இரண்டு கோபுரங்களைக் கட்டி, அதில் "1815-ல் நெப்போலியன் தோல்வியுற பிரிட்டிஷார் வெற்றியுற்றதைக் கொண்டாடும் பொருட்டுக் கட்டப்பெற்றது" என்று எழுதியுள்ளமையால் ஆங்கிலேயர் பால் அன்பும், நன்றியும் உள்ளவர் என்பது பெறப்படுகின்றது. தஞ்சை சிவகங்கைக் குளக்கரையில் ஸ்டுவார்ட்ஸ் என்ற நண்பரின் சின்னத்தை நாட்டினுர். இஃது அவர்பால் கொண்ட இவரின் அன்பின் பெருமையைக் காட்டுகின்றது.

இசைக் கலையிலே இவருக்கு இணையிலா ஈடுபாடு மிகவுண்டு. திருவையாற்றிலே வாழ்ந்த பெரும் இசைப்புலவர் தியாகராசர் இவர் காலத்தவர். சரபோசி பன்னுட்டு இசைக் கலைகளையும் இணைப்பதிலே ஆர்வம் கொண்டவர். தென்னுட்டு இசையை மேல் நாட்டு வாத்தியங்களிலே சேர்த்து இசைப்பதற்கு செய்த முயற்சியிலே மன்னர் வெற்றி கண்டார். அதுவே இன்றும் புகழ்பெற்ற "தஞ்சாவூர் பாண்டு" ஆகும்.

வடநாட்டுப் பாகத்தையும், தென்னுட்டு பாகத்தையும் இணைத்து ஒரு கூட்டுச் சமையல் முறையை உண்டாக்கிய பெருமை இவருடையதே. இன்றும் நாடெங்கணும் "தஞ்சாவூர் மராட்டியர் கிளப்" என்ருல் ஒரு தனி மதிப்பு இருப்பதை அறியலாம்.

இவர் தன் நாட்டுக்குச் செய்த நலங்கள் பல. தஞ்சாவூர் கழிவுநீர் போக்கு வசதி (Drainage System) 1825—28 ஆண்டுகளிலே இவர்செய்த பணியாகும். தஞ்சாவூர் மக்கட்குக் குடிநீர் வசதி செய்தவரும் இவரே. இன்னும் இவர்செய்த அறங்கள் எண்ணிலடங்கா. ஏழைகள் மீது அன்பும் கருணையும் கொண்டவர். அற்ருரின் அழிபசி தீர்ப்பதற்காக அநேக அறச்சாலைகள் கட்டி உண்டி கொடுத்து உதவி வந்துள்ளார். இவ்வாறு வறியார்க் கீந்து அதனுல் இசைபட வாழ்ந்த சரபோசி கி. பி. 1832ல் பூத உடம்பை

நீத்து என்றும் இறவாத புகழ் உடம்பை எய்தினர். அதன்பின் தஞ்சை நகர ஆட்சி யுரிமையை அவரது மகனர் சிவாஜி அரசர் மேற்கொண்டார்.

இவ்வாருக தோன்றிப் புகழொடு வாழ்ந்த சரபோசிக்கு முத்தாம்பாள் என்ற காமக்கிழத்தி இருந்தாள். அவள்பால், மிக்க அன்புடைய இவர் அவள் பெயரால் சத்திரம் முதலியனக் கட்டி தருமங்களைச் செய்தார். அச்சத்திரம் முத்தாம்பாள் சத்திரம் (ஒரத்தநாடு சத்திரம்) எனப்படும். மற்றும் அவளுக்காகக் கட்டப் பெற்றதுதான் திருவையாற்றில் காவிரிக் கரையில் அமைந்த "கலியாணமகால்" ஆகும். இக் கலியாணமகால் இன்று "அரசர் கல்லூரி" என்ற பெயரால் வடமொழியையும், தமிழ் மொழியையும் மாணவர்கட்கு வழங்கி வருகின்றது. இக்கல்லூரியைத் தோற்று வித்து அது என்றென்றும் தன்னிடத்து மாணவர்கள் பயிலும் வண்ணம் நடைபெறுவதற்கு வேண்டுவனவாகிய நிலங்களை அளித்து ஆக்கந் தந்தவர் சரபோசியே யாவார். அம் மன்னர் தம் புகழை இன்று உலகறியச் செய்யும் நிலையில் இருப்பவைகளில் இவ்வரசர் கல்லூரியே மிகச் சிறப்புற்று விளங்குகின்றது.

"பிறர்க்கென முயலுநர் உண்மையானே
உண்டாலம்ம இவ்வுலகம"
அறம ஓங்குக!

**சோம. ஐயாறு,**
நான்காவதாண்டு.

---



# "பன்னீர்ச் செல்வம்"

"ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்"

என்பது பொய்யில் புலவன் பொருண்மொழியாகலின், அப் புகழ்பட நம் நாட்டில் வாழ்ந்தோர் பலர். இதனாற்றான் தமிழகம் சான்றோருடைத்து எனவும், "வான்புகழ் கொண்ட தமிழ் நாடே" எனவும் போற்றப்படுகின்றது. உலகம் என்பது உயர்ந்தோரையே குறிக்கும். இதனையே கடலுண் மாய்ந்த இளம் பெருவழுதி "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்றார். இன்னும் "உலகமென்பது பல பொருள் ஒரு சொல்லாகலின் ஈண்டு உயர்ந்தோரை உணர்த்திற்று, உலகம் அவரையே கண்ணாகவுடைமையின்" என்றார் நச்சினார்க்கினியரும். எனவே கல்வி, கேள்வி, ஒழுக்கங்களான் மேம்பட்டவரே சான்றோராவர். அச்சான்றோர் பலருள்ளும் நம் ஆ. தா. பன்னீர்ச்செல்வம் அவர்களும் ஒருவராவர். இவரைப்பற்றி விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்.

எந்நாடும் புகழும் ஏந்தல், நம் பன்னீர்ச்செல்வம் சோறுடைத்தெனப்படும் சோணாட்டகவயின், வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரியின் மருங்கே சிட்டிபுரம் என்னும் பதியில் 1–6–1888ல் பெற்றோரும் உற்றோரும் மகிழத் தோன்றினார். ஆரோக்கியசாமி தாமரைச் செல்வன் பன்னீர்ச்செல்வம் என்பது இவரது இயற்பெயர். செல்வம் அவர்களோடு, அறிவும் ஆண்மையும் பண்பும் போட்டியிட்டுக்கொண்டு வளர்ந்தன. திருச்சி தூய சூசையப்பர் கல்லூரியின்கண் கல்வி பயின்று, பின்னர் இலண்டன் சென்று, சட்டக்கல்வி பயின்று பார்-அட்-லாவாக 1918ல் இந்தியா போந்தார். இலண்டனில் பட்டம் பெற்றுத் திரும்பியவருக்கு அப்போது நாட்டில் நன்மதிப்பு இருந்தமையால், உடன், இவரை அரசாங்கம் வழக்கறிஞராக நியமித்தது. 1918 முதல் 1920 வரை தஞ்சை நகராண்மைக் கழகத் தலைவராயிருந்தார். இந்நாளில் சமன் செய்து சீர்தூக்கும் கோல்போலமைந்து ஒருபாற்கோடாது வாழ்ந்து வந்தார். அதுபோது சர் என்ற பட்டம் இவருக்கு அளிக்கப்பட்டது.

பின்னர் செல்வம் 1924 முதல் 1930 வரை தஞ்சை நாட்டாண்மைக் கழகத் தலைவராயிருந்து புகலரும் பணிகள் பலவும் ஆற்றினார். முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர் என்னும் நிலை நீங்கவும், கற்றனைத்து ஊறுகின்ற அறிவு ஒருவருக்கு எழுமை

யும் ஏமாப்புடையதாகியும் கேடில் விழுச்செல்வமாகியும் வருகின்ற கல்வியின் பெருமையை ஓர்ந்தும் இவர் நாட்டில் பல கல்விநிலையங் கட்கு ஆக்கந் தேடித்தந்தார். மன்னர் அறநிலைப் பொது நிலையங் களை யாவரும் பெற வழி வகுத்தார். இராசாமடம், ஒரத்தநாடு, நீடாமங்கலம் ஆகிய இடங்களில் பள்ளிகளை வளம்பெற வழி வகுத்தார். மற்றும் மாநிலம் போற்றும் மாத்தமிழ் தரணிபோற் றும் தீந்தமிழ்-இமயங்கண்ட எந்தமிழ், திருக்குறளைச் செங்கோலா கவும் வளையாபதியை வளையாகவும், குண்டலகேசியை குழையாகவும் சிலப்பதிகாரத்தைச் சிலம்பாகவும், மணிமேகலையை மேகலையாகவும் அணிந்து தனியரசோச்சிய தமிழ்-தெருவெல்லாம் முழக்கஞ் செழிக் கும் நிலையினை உணர்ந்தே, ஐயாற்றரசர் கல்லூரியின்கண் தனித் தமிழ்ப் பகுதியை 1927-இல் தோற்றுவித்தார். இவர் Educational Board, Educational Council ஆகியவைகளில் தலைவராய்த் தொண்டாற்றினர்.

1930ல் இவர் சென்னை சட்ட மன்ற உறுப்பினரானுர். வட்ட மேசை மாநாட்டு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, தமிழர் சார்பாக இலண்டன்மாநகரம் சென்று, தமிழர் நிலையுரைத்துத் தாய்நாடு மீண்டார். 1935 முதல் 1937 வரை சென்னை இறை யாட்சிக்குழுவில் உள்நாட்டு அமைச்சராகத் தொண்டுபுரிந்தார்.

"வன்கண் குடிகாத்தல் கறறறித லாளவினையோ
டைந்துடன மாணட தமைசசு"

என்ற குறளுக்கேற்ப வினை செய்யுங்கால் தளராது நலிவு போக்கி நாட்டு மக்களைக் காத்து, நூல் பல பயின்று, ஆள்வினை முயற்சியோடு ஒழுகிவரலானுர். நாட்டின் அல்லல் நீக்கி, பிணி யின்மை, செல்வம், விளைவு, இன்பம் முதலியன பெருக ஆவன செய்தார். இவ்வளவு நன்மை செய்தும் தனதின்பத்தை விரும்பா ராகி, வினை முடித்தலை விரும்பி, தந்நாட்டு மக்களை அழுத்தும் துன் பத்தினை நீக்க உதவியளித்து, தான் அத்துன்பத்தைத் தாங்கும் தூணுக விளங்கினுர். 1937ல் எதிர்க்கட்சித் தலைவராயிருந்த போதும் தமிழ் நாட்டில் ஊரூராய்ச் சென்று, தமிழர் வாழ வழி யமைத்தும், சொற்பொழிவுகள் செய்தும் புகலரும் பணிகளைச் செய்துள்ளார். 1937க்குப் பின்னர் மூன்றரைத்திங்கள் இவர் இடைக்கால சர்க்காரில் அமைச்சர் பதவியும் பெற்றுத் திறமையுடன் பணியாற்றினுர்.

"மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை எமை மாட்ட நினைக்குஞ் சிறைச்சாலை" என எண்ணி தமிழ்மொழிக்கெனச் சிறை செல்ல முடிவுகொண்ட நம் செல்வம் அவர்களை 18–1–1940ல், இந்திய அமைச்சருக்கு ஆய்வுரை தருபவராக மன்னர் அமர்த்தினர். தமிழர் ஒவ்வொருவரும் அப்பதவியினைத் தாம் பெற்றதாகவே எண்ணிப் பெரு மகிழ்வு கொண்டனர். தமிழர் நலம் வளர்க்கும் நம் பன்னீர்ச் செல்வம் மன்னர் அழைப்பிற்கிணங்கி பதவியேற்கும் பொருட்டு 1940-ம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் முதல்நாட் காலை கராச்சியி லிருந்து புறப்படும் "அனிபால்" என்ற விமானவூர்தி யிவர்ந்து இலண்டன் நகருக்குப் புறப்பட்டார். மறுநாள் பாரசீக வளைகுடா விற்கு மேலே செல்லும்பொழுது, அவ்வூர்தி மறைந்து விட்டதாக உள்ளந்திடுக்கிடும் செய்தி தமிழருக்கு எட்டியது. மாநிலமே மறைந்த செல்வத்திற்காக துன்பக்கடலுள் மாழ்கியது. அதன்பிறகு அவ்வூர்தியைப் பற்றிய செய்தியொன்றும் இதுகாறும் கிடைத்திலது.

பன்னீர்ச்செல்வம் அவர்களிடம் பண்புடைமை என்னும் பயனுடைச் செல்வமே செல்வமாக மிளிர்ந்தது. சுற்றத்தார் மேல தன்றிப் பிறர் மேலும் உளதாகிய அன்பும், பழிசெய்த பகைவனயி னும் அவன்மேல் கண்ணோட்டமும், யாவர்மாட்டும் ஒப்புரவு செய் தலும், எவ்விடத்தும் மெய்ம்மை கூறலுமாகிய சால்பினை உடையவ ராகித் திகழ்ந்தார். நயனொடு நன்றி புரிந்த இப்பயனுடையார் பண்பை உலகு பாராட்டியது. மல்லையை மறைத்த கடல்–தொண் டியைத் தொலைத்த கடல்–குமரியைக் கொண்ட கடல் செல்வம் அவர் களைச் சிதைத்ததில் வியப்பில்லை. அவரைத்தான் கடல் கொள்ள முடிந்ததே தவிர அவரது புகழினை எள்ளளவும் சிதைக்க முடிய வில்லை. அவர் மறையாது மன்னு வுலகத்துத் தம்புகழ் நிறீஇ, தமிழருள்ளத்து என்றும் மன்னிய செல்வராயினர். செல்வம் மறைந்தாலும் அவர் தஞ்சையில் கூறிய "யான் எந்நிலையில் இருப் பினும் தமிழன் என்பதை மறவேன்" என்ற நல்லுரை இன்றும் நம்மனோர் உள்ளத்திலும் செவியிலும் நிலைபெற்றுவிட்டது.

"அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்"

வாழ்க செல்வம் புகழ்! சிறக்க செல்வத்தின் தொண்டு!!

---

ஆ. இராமசாமி,
மூன்றுவதாண்டு.

தமிழ்த்தாய் வாழ்க!

# பொன்னி வாழ்த்து.

—o—

## அகவற்பா.

செந்தமிழ்க் கிறையாஞ் செவ்வே டனக்கு
மாமனா கண்டலன் தாம மலர்மிகு
நந்தன வனந்தா னந்த னுருதே
வளமீக் கூர வளவிலோங் கார
வடிவின னாகிய கடிகண பதிதான்
கொடியின் வடிகொடு நொடியினி லெய்தி
யமர முனிவன் அகத்தியன் றனாஅது
கரகங் கவிழ்ப்பக் காசினி தழைப்பக்
குடக மலையினின் மடமட வெனவே
குணபா லொழுகுறுங் குடக்கினி லோடும்
பருதியின் வழிவரு பரம்பரைச் சோழர்
குலக்கொடி விளக்கே! குலக்கொடி விளக்கே!
விண்ணவர்க் கிறைவன் வேண்டலிற் போந்து
பூங்காப் பொலிவுறப் புரிந்தபெற் றிமையால்
காவிரி யென்னுங் கவினுறு நாமம்
தாங்கினை யென்பது தகவுடைத் தன்றே!
குடகவெற் பிணையொரீஇ குடமுனி தன்னெடுங்
கீட்டிசை நோக்கிக் கிளர்வுறப் போந்தனை!
எழுவகைத் தாதுவின் விழுமிதாக் கொள்வது
செந்தா தென்பது தெரியா ரியாரே!
அத்தகைத் தாதுவை யரித்தரித் தலைத்தே
இருகரை யொதுக்குறும் பெருகிய வளத்தால்
பொன்னி யென்னுமோர் மன்னிய திருப்பெயர்
வயங்கிடப் பெற்றனை மண்ணகம் போற்ற
காசினி போற்றுங் கவேர னென்னும்
முனிவரன் றனக்கு முன்னிய தவத்தால்
மகளாய்த் தோன்றிய தகவுடைப் பெற்றியால்
சீர்கா வேரியென் றிருப்பெயர் தன்னைப்
பொறுத்தனை! புண்ணியப் பொருவிலா நதியே!

நின்னுடைப் பெயரால் மன்னிய பதிகள்
காவிரிப் பூம்பட் டினமெனக் கவினார்
காக்கள் செறிவுறு காவே ரிங்கர்
எனவிரண் டாதலை எவர்தாம் உணரார்
கோணிலை திரிந்து கோடை நீடினும்
தானிலை திரியாத் தண்டமிழ்ப் பாவையென்
றேத்தினர் நின்னைச் சீத்தலைச் சாத்தனார்
சீரிளஞ் சென்னி சேயாஞ் சோழன்
கரிகாற் பெருவளத் தானை வரிசை
யறிந்தநற் புலவர் ஆன்றோர் ஏத்தும்
சீர்முடத் தாமக் கண்ணியார் செய்ய
தமிழ்மொழி யதனில் தலைசிறந் தோங்கிய
பத்துப் பாட்டில் பரிவுறு பொருநர்
ஆற்றுப் படைதனில் ஏற்ற மிகுமார்
குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை
கடுந்தெற்று மூடையின் இடங்கெடக் கிடக்குஞ்
சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் டாகக் காவிரி
புரக்கு நாடெனப் புகழவும் பெற்றனை!
செந்தமி ழன்னையின் சிலம்பா மிளிர்வுறும்
காவியந் தன்னில் ஓவியப் புலவன்
இளங்கோ வடிகள் வளங்கிளர் வுறுமார்
பாடப் பெற்ற தேடரு நிதியே!
நின்னிரு கோட்டினும் நிமலனார் உறைபதி
எண்ணி லடங்கவும் இயம்பவும் பெறுமோ!
வடக்கு நோக்கியும் தெற்கு நோக்கியும்
செல்லுந் தகைத்தால் சீர்வட மொழிப்பெயர்
செறிவுறப் பெற்றனை! தக்கிண வாகினி
உத்தர வாகினி யெனவே உலகினில்
அணையால் அணைக்க அமர்ந்தனை! அன்னாய்!
கொடிமுடிப் பரமனை குலாவி யேத்தினை!
பராய்த்துறை யரங்கம் பரனா னைக்கா
அன்பிலா லந்துறை அரன்றிருக் காட்டுப்
பள்ளி நெய்த்தானம் தெள்ளு மையாறு
பழனஞ் சோற்றுத் துறையும் பகரரு

ஆடு துறையும் கோடி காவும்
திருத்துருத் தியொடு திருமயி லாடு
துறைவள நகரும் நறைமலர்க் கொன்றை
நம்பன் செம்பொன் பள்ளி நகரும்
ஆளுடைப் பிள்ளையார் அம்மான் பதியாம்
சீர்நனி பள்ளியும் திருவெண் காடும்
சாய்க்காட் டாதி சார்ந்து பணிந்து
கடலினை மணந்து கவினுறப் பெற்றனை !
இப்பெருந் துறையினை ஒப்பிலாச் சங்கமத்
துறையெனச் சொல்லும் தூய்மையும் உற்றனை !
மாமக நாளில் மாநில மாக்கள்
ஆடிப் போற்றுமா அமைந்தனை குடமூக்
கென்னும் பதியிடை முன்னை நான்மறை
முறைமுறை வழுத்துறும் முற்றுணர்ப் பரமன்
திகழ்மயி லாடு துறையினிற் செறிதுலை
திங்க டன்னில் தீர்த்தமா யிலங்கினை !
சைவமும் தமிழும் சாத்திரக் கலையும்
தழைத்திட வருளும் தருமைத் துறைசைப்
பதியிடை மேவும் பான்மையு முற்றனை !
ஆளுடைப் பிள்ளையும் அரசும் நம்பியும்
அருளிய பதிகத் தமைவுறப் பெற்றனை !
உறையூர்ச் சோழனார் நிறைநீர் மூழ்க
நித்திலத் தாம நேருற வேந்தி
நிமலனார்க் காக்கி நிமலமு முற்றனை !
நின்னிடை மூழ்கு நேய முற்றவர்
தெய்வ வொளியொடு சிவத்தினைச் சேர்வர்
எனவே யப்பரா மெந்தை யிசைக்கும்
ஈடில் பேறும் எய்தினை யன்றோ !
கொண்டல் நீரும் குணநந்தி வாய்நுரை
நீரும் அம்மைப் பயோதர நீரும்
கங்கை நீரும் கமண்டல நீரும்
குழுமி நந்தியெம் பரனைக் கழுவ
ஆய பெற்றியால் ஐயா றெனவும்
ஐம்புல வாறு மயரப் பெற்றுழி
அஞ்சே லெனவே வருளப் பெறலால்

ஐயா றெனவும் அறையப் பெறுமூர்
தன்னில் விளங்கும் தஞ்சை யரசன்
சீர்சர போசி செகமெலாம் போற்ற
அமைத்தகல் லூரியி லமையவும் பெற்றனை !
என்னை வியப்பு ! என்னை விந்தை !
வள்ளுவர் பெயரால் வயங்கிடு மாணவர்
செந்தமிழ்க் கழகந் திகழ்வுறும் வெள்ளி
விழாவினைக் காண்பான் மேதகு கரையினை
மோதிப் புரண்டு யோதி யுவந்தனை !
புலவர் வகுப்பில் நலமுறப் பயில்வுறும்
மாணவர் மாண்புற மாநிலம் வழுத்த
தெய்வ மென்பதோர் சித்தந் தெளித்தனை !
நின்னருட் டகைமை நீணில மதனிடை
பொன்னால் மணியால் புண்ணிய நீரால்
தெய்வத் தன்மையால் உய்வகை யருளும்
மெய்வகை யதனால் விளம்பருந் தகைத்தோ
வேணவாத் தீர்த்த விளக்கே வாவென
முன்னமோர் புலவனும் மொழியப் பெற்றனை !
மன்னுமா காவிரி வருட வெனவும்
அரவந் திரைக்கா விரிக்கோட் டத்துள்
ஐயா றுடைய அடிக ளென்றும்
பன்னப் பெறுநற் சொன்னய முற்றனை !
உணவினை யாக்கு முரமும் உணவாய்
நிலவுறுஞ் செந்தமிழ்க் குலவுறு தாயே !
வளமெலா முறச்செய் மாபெருந் தெய்வமே
பொன்னி காவிரியெனப் புகழ் காவேரி
யெனப்புகழ் பெற்ற எந்தாய் நீதான்
எல்லாம் வல்ல விறைவ னருளால்
வாழி யூழி மாநில மிசையே !

பண்டித, வித்துவான். இராம. கோவிந்தசாமிப் பிள்ளை,
தலைமைத் தமிழ்ப் பேராசிரியர்.



# கடல் தந்த செல்வம்.



மழைகொளக் குறையாது புனல் மிக நிறையாது கரை பொருதிரங்கும் முந்நீரடியில் முட்டின்றிக் கிடக்கும் முத்தரதன மாய கடற் படுகுவியலும், பல்கலம் பெற்றுத் தொல்கடல் கடந்து செயற்கருமுயற்சி யினீட்டிக்கொணரும் பெரும் பொற்குவியலும், வாயுணர்விற்கின்றியமையாத தூஉம் அறுசுவையுளொன்ருய்த் தலை நின்று நிலவுவதூஉமாகிய உப்பின் குப்பையுங் கடல் தந்த செல்வமென்பர். புலனுகர்ச்சிக்கும் புறவளர்ச்சிக்கும் காட்சிக்கும் மாட்சிக்குமோராற்ருற் பயன்பட்டுறுதுணையாய் நின்றழிந்தொழித லின் சான்ருேரிவற்றைச் செல்வமென்று சிந்தையிலெண்ணுர்.

அகவளர்ச்சிக்குப் பயன்படுவதாய் நவிருேறும் நவிருேறும் நனிபேரின்பம் நல்குவதாய்க் கண்ணிற்குங் கருத்திற்கும் பெருவிருந் தூட்டுவதாய் மொட்டுண் மணம்போல உள்ளுள் விராஅய் ஒளிந்து கிடக்கும் நுண்மாண்பொருளைத் தன்னகத்துக் கொண்டதாய் என்ஞ் ஞான்றுஞ் செவ்விபுலராது நின்று நிலவும் பத்துப்பாட்டாதியாய சங்க விலக்கியங்களையே யான் இவண் செல்வமென்ற சொல்லிற் சுட்டினேன்.

இவ்விலக்கியச் செல்வங்களைக் கடல் தந்த தென்றுரைத்தல் யாங்ஙனம் பொருந்துமெனின், உவர்ப்புத்தன்மையே வுருவெடுத்த விக்கொடுங்கடல் பல்வேறூழிகளிற் சினங்கிளர்ந் தெழுந்து அருந் தமிழ் நூல்களைத் தன்னகட்டின்கண் ணடக்கிக்கொண்டு, எஞ்சு தலுற்று விஞ்சு புகழ்பெற்ற இச்சங்கச் செந்தமிழ்ச் செய்யுட் களின் சொற்பொருளின்பங்களையுணர்ந்து சுவைத்தழிக்காது தந் தருளிற்ருகலின் பொருந்துமென்க.

அன்னோரன்ன அருந்தமிழ்ப் பாக்களை ஆக்கித்தந்த பைந் தமிழ்ப்பாவலர்க்குக் கடல் எவ்வெவ்வகையிற் காட்சிச்செல்வத்தை யுங் கருத்தின்பத்தையுந் தாரா நின்றது என்பதுபற்றியும் கடலடி யிற் புதைந்து பொதிந்து கிடக்கும் நிதித்திரட்சி போன்று, அவர் தம் பாக்களிற் செறிந்து அழுந்திக்கிடக்கும் நயத்திரட்சியுமோர் சிறிதுரைக்கப் புகுவானெழுந்ததே விக்கட்டுரையாகும்.

## 1. அலைகடல்தந்த அறுமுகன் செல்வம்.

மக்கட்கு இயற்கையினெழில் நலத்தைக் காட்டி அதனடியாக இறைவனின் றன்மையினை நினைவூட்டி அவர்கள் நன்னெறிக்கண் செல்லுதற்குறுதுணையாயமைவதே உண்மையிலக்கியத்தினுயரிய பண்பாம். இச்சீரிய பண்பினைக் கருத்துட்கொண்டு பண்டைய இலக்கியச் சோலைக்கண் நுழைகுவாம்.

வைகறை நேரம். கடலெழில் காணுங் கருத்துடன் கடற்கரைக்கண் சென்று நின்றனன் ஓர் கவிஞன். அஞ்ஞான்று அது அவனுக்கீந்த செல்வத்தின் சீர்மையை யென்னென்பது!

கவிஞன் கண்ணிற்கு முதற்கண் கடல் பசுமை நிறத்துடன் காட்சியளித்தது.அதைத்தொடர்ந்தாற்போற் காலையிளஞாயிற்றின் செந்நிறத்தோற்றம் அவன் சிந்தையைக் கவர்ந்தது. அதுகாலை மண்ணிடைவாழும் மக்கட் கூட்டமுவக்க செவ்விளம்பரிதியின் ஒண்ணிறக்கதிர்கள் பாரெங்கும் பரவிக்கிடந்த புறவிருளைப் பகைக்கத் தொடங்கின. குடம்பையுட்கிடந்து அடங்கிக்கிடந்த புள்ளினங்கள் இடங்களைவிட்டு இன்னிரை நாடி அகவிச்சென்றன. கடற்பசுமையும் ஞாயிற்றின் செம்மையும் இருளொழிவும் புள்ளரவமும் மெல்ல மெல்ல கவிஞன் கண்ணிற்கு மறைந்து வேறோர் வியத்தகு நிலையிற் காட்சியளித்தன. பரந்துபட்டபசியகடல் தண்ணிய பசிய பெரிய தோகையினையுடைய மயில்வடிவாக மாறிற்று. கடலிடையெழுந்த வட்டவிள ஞாயிற்றின் செந்நிறத்தோற்றம் திருமேனிச் செம்மையுடன் மயிலின் மேலூர்ந்து நின்றன்பர்கட்கருள்புரியும் முருகப்பெருமானி னருட்டிருவடிவாகக் காட்சியளித்தது. புறவிருளையொழிக்கும் பரிதியின் ஞெழில் பற்றுடன் தன்னை மனத்தால் நோக்கும் பக்தர் தம் அகவிருளாம் மாயையைக் கெடுக்குங் குமரன் செயலை நினைவுபடுத்திற்று. சீவான்மாக்கள் மகிழவும் புள்ளினங்கள் ஆர்ப்பரிக்கவும் ஞாயிறெழுந்ததோற்றம் அடியவர்குழாமளவில் உவகையாலுள்ளந்துள்ள வடிவேலனெழுந்த வொடிவிற் காட்சியை ஒவ்வாநின்றது. ஞாயிறு பொன்னிறக் கதிர்களைப் பரப்புந்தன்மை கோழிக்கொடி யோனினருட்பெருங் கடற்பெருக்கெடுக்கும் பான்மையைக் காட்டி நின்றது. எனவே தன்வளங்காண வந்த கவிஞனுக்கு, இயற்கையழகை யூட்டுமுகத்தான் அறிவில் செல்வமாகிய இறைத்தன்மையை நினைவுபடுத்திக் காட்சிச் செல்வத்தையுங் கருத்தின்

பத்தையுங் கடல் தந்து நின்றது. அதனைக் கண்டு களித்த புலவர் பெருமகன்

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன்றாட்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை
மறுவில் கற்பில் வாணுதல் கணவன்"

என்று வாயார வழுத்துவானாயினன்.

## 2. அந்துவன் கண்ட ஆழிச்செல்வம்.

மற்றோர்நாள் அக்கடற்கே அதன் இன்கவின் காண்பான் அந்துவனென்னும் அருந்தமிழ்க் கவிஞன் சென்று நின்றனன். அவ் வமயம் அப்பெருங்கடல் எவ்வகை அரவமுமின்றிப் பெருந்துயில் கொண்டிருந்தது. கரையின்கண் கரிய புன்னைமரங்கள் ஓங்கி நின்றன. அவற்றின் சிறிய கிளைகளில் நறியமலர்கள் தொத்துத் தொத்தாய்த் தோன்றி நின்றன. அம்மலர்களில் மதுவெள்ளம் பொங்கி வழிந்துகொண்டிருக்க அதைப் பருகுவானிமித்தம் சுரும் பினமும் தும்பியீட்டமும் வண்டின் கூட்டமும் ஒன்று கலந்து 'இம்' மெனப் பாடத்தொடங்கின. வண்டின் இன்னிசையும் கடலின்றுயில் நிலையுங்கண்டு களித்த கவிஞன் கண்ணிற்கு இக்காட்சி சிறிது சிறிதாய் மறைந்தது. தன்முன்னால் அறிதுயிலமரும் திருமாலின் பெருவடிவினைக் கண்டனன். பெருங்கடலன்ன கருவண்ணனைச் சூழநின்று அடியவர் குழாம் யாழின்கண் இன்னிசை யெழுப்பி, நின்றனர். அக்கனிந்த இனிய யாழ்ப்பாடலைக் கேட்டவண்ணம் மெய்ம்மறந்து அறிதுயிலாம் பெருந்துயில் கொள்ளா நின்றனன் திருநெடுமால். இவ்வண்ணம் வண்டோசையையே யாழிசையாகவும், தன்பெருவடிவையே திருமாலாகவும், அரவமின்றியிருத்தலையே அரிதுயிலுறக்கமாகவும் கடல் கவிஞனுக்கு மாற்றிக் காட்சியளித்தது. இவ்வியற்கை தோற்றுவித்த இறைவன் வனப்பிலீடுபட்ட கவிஞன்

"கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறுஞ்
சுரும்பார்க்குங் குரலினோ டிருந்தும்பி யியைபூத
ஒருங்குடன் இமமென இமிதலிற் பாடலோ
டரும்பொருள் மரபினமால் யாழ்கேளாக் கிடந்தான்போல்
பெருங்கடல் துயில்கொள்ளும்"

என்று போற்றுவானாயினன்.

### 3. கவிஞன் கண்ட பெரும்படைச் செல்வம்.

கடல்தரும் மற்ருேர் காட்சி. அவண் படகுகள் வரிசை வரிசையாய் அசைவின்றிச் செலுத்துவான் சிந்தையறிந்து பெருமிதத்துடன் நிற்கின்றன. இவண் எழும் அலைகள் ஒன்றன்மேலொன்று உராய்ந்து பெரு முழக்கஞ் செய்கின்றன. கரைக்கண் நீண்ட பெரிய பறவைகள் இரைகவர்வான் சிறிதுந் துளக்கமின்றிச் செருக்குடன் நிரல் நிரலாக நின்றுகொண்டிருக்கின்றன. இக்காட்சியைக் கவிஞன் கண்டனன். படகும் அலையும் பறவையும் அவன் பார்த்தானில்லை. பகைவனை ஒறுப்பான் கிளர்ந்தெழுந்த ஓராண்டகை வேந்தனின் படையெழுச்சியினையன்ருே பார்த்துக் களித்தனன். படகுகள் யாவும் அணிவகுத்து நின்றயானைச் சேனைகளாகக் காட்சியளித்தன. அலைகளின் பெரு முழக்கம் வீரர்களின் ஆண்மையை மிகுவிக்கும் போர்ப்பறைகளின் இடி முழக்கமாக மாறித் தோன்றிற்று. நிரல்படநின்ற பறவையீட்டங்கள் வியூகத்துடனின்ற காலாட்படைக் கூட்டத்தைக் காட்டிற்று. ஓர் நொடியிற் கடல் இங்ஙனம் மாறுபட்ட செல்வத்தைத் தாராநின்றது. இங்ஙனம் இயற்கையின் படை யெழுச்சியில் இதயத்தைப் பறிகொடுத்த பண்டைப்பாவலன்,

> ''நிரைதிமில் களிறுகத் திரையொலி பறையாகக்
> கரைசேர் புள்ளினந் தளுசிறை படையாக
> அரைசுகால் கிளர்ந்தன்ன உரவுநீர''

என்று பாடுவாஞயினன்.

### 4. புணரி ஈந்த பொருவில் செல்வம்.

கடல்; கானல்; முன்னது நீல நிறமுடையது. ஆழ்ந்த கன்று அழகுத் திரட்சியாய் அமைந்திருப்பது. பின்னது நுண்மணற் பரவிய வெண்ணிறச் சோலை. அவ்விடுமணற் சோலையின்கண் புணரியின் நீணிறத்திரைகள் மடிந்து மடிந்து வந்து பொருந்திச். செல்லாநின்றன. இக்காட்சிகள் கவிஞனுக்கு இணையிலாச் செல்வத்தையீந்து நின்றன. கடல், மாயவன் அழகினுறைவிடம் திருவுடைச் செல்வன் உயிர்தொறும் பரந்துநின்ற பரம்பொருளாகக் காட்சியளித்தது. கானல், வெண்மை நிறத்தினன், வல்லமை வாய்ந்தவன் கவின்பெறு திருவுரு கண்ணன் முன்னேன் பலராமனைக் காட்டி நின்றது. நிரல்படவந்த நீணிறத்திரைகள் அப்பலராமன் அழகு பெறவுடுத்திய நீணிறவாடையாய் மாறிற்று. ஆகவே கடலினையும்

கானலினையும் வெண்டிரைகளையுங் காணவந்த கவிஞன் மாயவனை யும், அவன் முன்னவனையும் அவனழகுறப் புனைந்த ஆடையினையுங் கண்டனன். கழிபேருவகைகொண்டு அக்காட்சியின் மாட்சியிற் கருத்தைச் செலுத்தினன்.

"மணிகிளர் நெடுமுடி மாயவனுந் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலுங் கானலுந் தோன்றுமால்"

என அவ்வியற்கையின்கண் அழிவில் செல்வத்தைக் கண்டு மகிழ்ந் தனன். இஃதன்றோ புணரியீந்த பொருவில் செல்வம்.

### 5. நெடுங்கடல் தந்த நிகரில் செல்வம்.

இறைவன் படைப்பிற்குட்பட்ட பொருள்கள் யாவினுங் கடலே வன்மையும் ஒண்மையும் வளமையும் வாய்ந்தது. இயற்கை யழகின் நறுஞ்சுவையை நுகர விரும்பிய கவிஞர்கட்கெல்லாம் இறைவன் தன் தோற்றத்தை நினைவு படுத்து மாற்றல் மிக்கது. இறைவனே இயற்கை இயற்கையே இறைவனென்னு முண்மையை மெய்ப்பிப்பது. இக்கடற்றான் எத்துணை எத்துணை வகைகளாகக் காட்சியளிக்கின்றது. வெள்ளிய அருவியைத் தன்பாற் கொண்டிலங் கும் மலையின் மாட்சியை யன்றோ இந்நெடுங்கடல் கவிஞனுக்கு நினைவுபடுத்தியது. 'எழுதரு மதியங்கடற் கடற்கண்டாஅங்கு ஒழுகுவெள்ளருவி ஓங்கு மலைநாடு' என்று நவில்வானாயினன். கரையில் இடுமணலின் நெடுங்குன்றுகள் நிறைந்திருக்கின்றன. காற்றலுந்தப்பட்ட பேரலைகள் வலம்புரிகளின் திரண்டகொம்பு களை உறுதுணையாய்க் கொண்டு நள்ளிரவின்கண் அந்நெடுங்குன்று களைக் குத்திக் குத்திச் சிதைக்கின்றன. அஃதோர் யானைப் போரி னைப் பாவலன்றனக்குக் காட்டுவதாயிரா நின்றது. திண்ணிய செறிந்த மதிலைத் தன் கூரிய கொம்புகளால் நள்ளிரவில் பெருங்களி றொன்று மோதித்தாக்கும் பெருவன்மையைத் தோற்றி நின்றது. இடுமணற்குன்றை எயிலாகவும் நெடுங்கடலைக் கடகளிறாகவும் வலம்புரியின் கொம்புகளை யானைக் கோடுகளாகவுங் கண்டனன். கடற்கரையில் ஞாழல், புன்னை, கைதை, செருந்தியாய பன்னிறமலர் கள் வரிமணற்கண் கவின்பெறப் பரவிக்கிடந்ததொரு தோற்றம் திருமாலின் திருத்தோளை யலங்கரிக்கும் கண்கவராரத்தை யொத்து நின்றது. கடலோ ஆழமுடையது. அதனினும் ஆழமுடையது கவிஞனின் கற்பனை. முயன்று மூழ்குவார்க்கு முத்துக்களைக் காட்டும். நயந்து நோக்குவார்க்கு நிகரில் செல்வத்தை நல்கும்.

கவிகளின் பொற்குவியற் கடற்றுனெனின் இழுக்கின்று. கடல் போற்றுனே, கடல் கிளர்ந்தன்னகட்டூர், அருட்பெருங்கடல், ஆனந் தக்கடல், குணக்கடல் என்றெல்லாம் பேசப்படுகின்றது. தன்கட் குடைவாரின் றீவினையைப்போக்கி நல்லின்பத்தை நல்கும் வன் மையுமிக்கடற்குண்டு. 'தீதுநீங்கக்கடலாடியும்', 'கோடியுற்றூர் வீடு பெற்றூர்' என்னும் வாக்குகளை நோக்குக. மேலும் இக்கடல் துய ருற்ற தலைவியர்க்குறுதுணையாய் நிற்குமுண்மையை அகப்பொருட் செய்யுட்களாலுணரலாம். பிரிவாற்றுமையாற்றலைவியர் கடலொடு கவன்ற செய்தியைக் காண்கின்றோம். இறவொடுவந்து கோதை யொடுபெயரும் பெருங்கடற் செலவினைத் தன்னெஞ்சொடு ஒப்பித்த தலைவனுமுளன். சங்கக் கவிஞர்க்கு மட்டுமல்ல. பிற்காலக்கவி ஞர்க்கும் கடலழிவிற செல்வமாய் விளங்கிற்று. தலைவனைப் பிரிந்து வாய்விட்டரற்றி மாலையை யறுத்து வளையல்களை நெகிழவிட்டு உறக்கங்கொள்ளாது மயக்கமுற்ற தலைவியின் கண்கட்குக் கடலும் அவ்வாறே காட்சியளித்தது. துன்புற்றூர் காண்பன யாவுந் துன்பமேயன்றே!

"வாயினிரங்கினை யார மெறிந்தனை வால்வளை சிந்தினைதண்
பாயலை யுநதினை மாலையடைநதனை பாரி லுறங்கிலையாற்
கோயிலரங்கனை மாகன கநதிகழ் கோகனகம் பொலியும்
ஆயிழை நண்பனை நீயும விரும்பினையாகும் நெடுங்கடலே"

என்று கூறுந்தலைவிக்குத்தான் கடலெவ்வாறு காட்சியளிக்கின்றது!

ஆகவே எல்லார்வல்ல இறைவன்போன்று கடலுந் தன்னைக் காணுங்கவிஞன் கருத்திற்குங் கற்பனைக்கு மேற்றவாறெல்லாம் தோற்றமளிக்குமுண்மையைக் காணலாம். இதனாலன்றே ஆன் றோரனைவருங் கடலையுங் கடவுளையுமிணைத்துக் காண்பாராயினர். வாழிய கடல்! வளர்க அதன் செல்வம்.

வித்துவான் **அ. வேங்கடராமன்,**
தமிழ விரிவுரையாளர்.



# வள்ளுவர் உள்ளம்.



வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்தமிழ் கூறும் நல்லுலக மாயிலங்கிய நம்தமிழகம், தென்குமரியையும் வடபெருங்கல்லையும் குணகுட கடல்களையும் எல்லையாகக் கொண்டிலங்கியது. ஒரு காலத்தே பனிபடுநெடுவரையின் வடக்கும், உருகெழு குமரியின் தெற்கும், தொடுகடலாம் வங்கக்கடலின் கிழக்கும், தொன்றுமுதிர் பௌவமாம் அரபிக்கடலின் மேற்கும் தமிழக ஆட்சி விரிவுற விளங்கியது. இன்னும் இயற்கையின் விளைவால் இன்னலுற்று இடஞ்சுருங்கிய காலத்தே, நாடு கண்ணகற்றும் நாட்டங்கொண்ட நற்றமிழ்வேந்தர் நலிவுபோக்கி நாடகற்றியுமுள்ளனர். வடிவே லெறிந்த வான்பகை பொருது பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக்குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள, அதற்கீடாக வடதிசைக் கங்கையும் இமயமுங்கொண்டு தென்றிசையாட்சி சிறப்புற்றோங்கியது இத்தமிழகம். தெய்வத்தால் தீமைகள் பல நேரினும் விதி விதி எனக்கூறி மதிமயங்காது, ஊக்கத்தால் உழைப்பால் ஊழையு முப்பக்கங்கண்டு ஊறுபாடின்றி வாழ்ந்தனர் மக்கள். தண்டமிழ் போற்றித் தகுவழி நின்று ஆக்கம் புரிந்து அணிசெய்து பணிபுரிந்தனர் பழந்தமிழ் மக்கள். ஒருமொழி வைத்துலகாட்சி செய்த தமிழகம், வாழ்வு, வளன், நாகரிகம், பண்பு, பழக்க வழக்கங்கள், பண்பாடு, இறைநெறி இவைபோன்ற பலவற்றுலும் தனிச்சிறப்புற்று ஏனைய நாடுகளுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இலங்கியது.

சீர்பெற்றுயர்ந்த செந்தமிழ் நாட்டில் வாழ்ந்த மக்கள் கொண்ட வாழ்க்கை நெறியைப், பண்படுத்திய பொருளை தமிழ்ச் சான்றோர் இன்பம், பொருள், அறன் என மூன்றாக வகுத்து இயம்பினர். தண்டமிழ் மொழியின் தனிச்சிறப்பாக அமைந்த திணைப் பாகுபாடுகளிலமைந்த கருத்துரைகளும் இன்பம் பொருள் என இயம்பப்படும் இனிய வழியிலேயாம். மக்கள் உள்ளத்தே எழுந்த கருத்துக்களை இசையொடு சேர்த்துச் சொல்லுணர்த்துங்கால் ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென நால்வகைப் பாக்களிலே நாட்டினர் நாவலர். அவ்வகைப் பாக்களிலே அறையப்படுவன அறம், பொருள், இன்பம் என்ற மும்முதற் பொருள்களேயாம். இக் கருத்து, 'இன்பமுபொருளுமறனுமென்றாங்கு அன்பொடு புணர்ந்த

ஐந்திணைமருங்கு' என்றும், "அறமுதலாகிய மும்முதற் பொருட்கு முரிய" என்றும் கூறுமாற்றுனறியப்படும். இங்ஙனமமைந்த மும் முதற் பொருளின் முறையினை ஓர்ந்தே,

"சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல" என்றும்'
"அறம்பொரு ளின்பம் என்ற மூன்றும
ஆற்றும் பெருமநின் செல்வம்" என்றும்
"அறம்பொரு ளின்பமென் றம்மூன்றி 'ஞென்றன்
திறஞ்சேரார் செய்யுந் தொழில்க ளறைந்தன்று" என்றும்

நாவலர் பலரும் நவில்வராயினர். மேற்கூறியவற்றுல் மக்களுக்கு வேண்டப்படுவன அறம், பொருள், இன்பம் என்ற மூன்றுமேயாம்.

உலகில் மக்கள்தம் வாழ்வில் தனித்து வாழும் வாழ்க்கை யினும், ஒருவனும் ஒருத்தியும் காதலாற் கூடி வாழும் வாழ்க்கையே சிறப்புடைத்து. கூட்டுவாழ்க்கையால் நாட்டில் ஏற்படும் நலங்கள் பல, ஆண் பெண் பாகுபாடும் இக்கூட்டுவாழ்க்கையின் கொள்கை யினைவலியுறுத்தும். அக்கூட்டு வாழ்க்கையே இன்பமெனப்படும். அவ்வின்பம் சிறப்புற வமைவதற்கு. பொருள் வேண்டற்பாலது. மகனொருவன் தன் மணங்கருதிப் பொருள்வயிற் பிரிகின்றுன். இதுவே அகப்பொருளில் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரி தல் என அறையப்படும்! அதன்பின் அப்பொருளினை அறவழி நின் றுற்றும் அறநிலை வேண்டற்பாலதே. எனவே இன்பம், பொருள் அறன் என அமைந்தது ஒருமுறை. மற்றொருமுறை மக்கள் உள்ளத்தே முதற்கண் அறநெறி நின்று, அவ்வழியே பொருளினை ஈட்டி, அதனுல் இன்பத்தைப் பெறுதலாம்.) மேற்கூறிய இருவேறு முறைகளிலும் பொருள் நடுவணமைந்து நாட்டங்கொள்ளும் ஏற்றம் பெற்று இலங்குகின்றது. இதனுலன்றோ, "நடுவணதெய்த இரு தலையுமெய்தும்" என்றும், 'பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை' என் றும், "பொருளல்லாற் பொருளுமுண்டோ" என்றும், "பொருளல்ல வரைப் பொருளாகச் செய்யும்" என்றும் புலவர் பலரும் போற்றிப் புகல்வாராயினர். இங்ஙனமமைந்த சிறப்பெலாமுணர்ந்தே தெய்வப் புலவர் திருவள்ளுவர் அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப் பால் என அமைத்தும், அறத்துப்பாலில் இல்லறத்தை முதற்கண் எடுத்தோதும் நல்லியல்பால் இன்பத்தை முதற்கண்ணமத்தும் கூறுங்கால் பொருள் நடுநிலை பிறழாது போற்றி யருளு நெறியை ஆன்றோர் அறிந்து மகிழ்வாராக.

நம் நாட்டில் மூன்று எனும் எண் சிறப்பாகப் போற்றப்படு கின்றது. முத்தமிழ், முந்நாடு, மூவேந்தர், முக்கொடி, முப்பதி மும்மலை, முந்நதி, மும்முரசு, முக்குணம், எழுத்து சொல் பொருள், பதி, பசு, பாசம், முக்கனி என மூன்றாக அமைந்தது போலவே வள்ளுவர் குறளும் முப்பாலாக முறைபட அமைந்து சிறப்புறுத்து கின்றன. இன்னும்;

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்" என்றும்

'சமயக் கணக்கர் மதிவழி கூறாது உலகியல் கூறிப் பொரு ளிது வென்ற வள்ளுவன்" என்றும், "தெய்வப் புலவன் திருவள்ளு வன்" என்றும்,"உள்ளிருள் நீக்கும் விளக்கு" என்றும், "பொய்யில் புலவன் பொருளுரைதேராய்" என்றும் புலவர் பலரும் போற்றிச் சிறப்பித்துள்ளனர்.

இனி முதற்கண் மொழிந்த அறத்தினைப்பற்றி அனைவருங் கொள்ளும் நெறி அறிந்தின்புறத்தக்கது. /மக்கள் முதற்கண் ஒன் றைப்பற்றி எண்ணுதலும், பின் சொல்லுதலும், அதன்பின்செய்த லுமே உலகியற்கை. உள்ளத்தின் தூய்மையை உண்மையென்றும் வாக்கின் தூய்மையை வாய்மை என்றும், செயலின் தூய்மையை மெய்ம்மை என்றும், தமிழகமளித்த பெயர்களால், அறநெறி திறம் பாப்பொருளமைதி அறியப்படுகின்றது. மேலும் இக்கருத்து அழுக்காறாமை, வெஃகாமை அதிகாரங்களால் உள்ளத்தின் தூய்மை யும், இனியவை கூறல், புறங்கூறாமை அதிகாரங்களால் சொல்லின் தூய்மையும், பொறையுடைமை, கொல்லாமை அதிகாரங்களால் செய லின் தூய்மையும், விளங்கி நிற்றலறியப்படும். எனவே சொல் செயல் நிகழ்தற்கு முதலாக அமைந்த உள்ளத்தின் மாசிலாநிலையே அறமெனத்தகும். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத உறவுமதுவே யாம். மனத்து நிகழ்ந்ததை மறையாது அறையும் அறத்தொடுநிற்றல் என்னும் அகப்பொருட்டுறையின் ஆன்றமைந்த கருத்துமறமேயாம். சிறந்தானை வழிபட்டுச் செல்லும் நிலையாம் அறந்தலைப்பிரியா ஆறும், ஓர்வுற்று ஒருதிறன் ஒல்காத நேர்கோல் அறம்புரி நெஞ்சமும் அறமேயாம். இதனையே பொய்யில் புலவர்,

8

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற."

என உள்ளத்தின் தூய்மையை அறமென அறைவாராயினர். இன்னும் இல்விடத்துச் செறிந்திராத இளையோன், அரும்பிணியுறு நர்க்குமருந்தாய்ந்து கொடுக்கும் அறவோன், ஈதலிற் குறைகாட்டாத் தீதிலாச் செல்வன், திறனறிந்து சொல்லுவோன், தன்னெஞ்சறிவது பொய்யாத தக்கோன், பெண்ணேவல் செய்யாப் பெருந்தகை, வினையே ஆடவர்க்குயிர் எனவேட்டோன், ஆள்வினை கொள்ளும் தாளாளன் இன்னோர் பலரும் அறம்புரி நெஞ்சத்தவராவர். இங்ஙனம் ஏர்பெறவமைந்த சீருறு கருத்தினை உணர்ந்தே குறள் உலகம் போற்றும் உயர் நூலாகவும் பொது மறையாகவும் போற்றப் படுகின்றது.

மக்கள் வாழ்விற்கு மாண்பொருள் கூறும் வள்ளுவர் கருத்துக்கள் விரிப்பினகலும் தொகுப்பின் எஞ்சும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயம்பிய வள்ளுவரின் தெளிவுரைகள் அன்றும், இன்றும், என்றுமே ஏற்றந்தருமுறையிலிலங்குகின்றன. நம் நாவலன் நவின்ற ஒழுக்க நெறியினை, நாட்டார் நாட்டங்கொள்ளின் நாடு உயரும்; நலம் பல மலியும்; பயன் பல பெற்றுப் பாங்குற ஓங்கி வாழ்வதுறுதியே. அன்புகொளும் நெறியிலே ஒழுங்கு, அறிவு பெறும் வழியிலே ஒழுங்கு, காதல் கொள்ளும் வாழ்விலே ஒழுங்கு, அறத்தாற்றும் இல்லறநெறியிலே ஒழுங்கு, புறத்தாற்றிற்போய்ப் பெறுவதற்கும் ஒழுங்கு. அரசியலிலே ஆக்கம் பெறுவது ஒழுக்கத்தினலே. கடவுள் நெறியில் நிற்பதற்கும் வேண்டுவது ஒழுக்கமே. ஒழுக்கம் விழுப்பந்தருவது உடற்கேயன்றி உயிர்க்குமாதலால் உயிரினும் ஓம்பப்படுவதாயிற்று. அதுவே உயர்ந்த பண்புகளை யுடைமையான் குடிமை எனக்கொள்ளப்படும். இன்னும், புறத்தாற்றினின்று வஞ்சமனத்தான்படிற்றொழுக்கம் புரியும் வேடத்தாரை பூதங்களைந்துமகத்தே நகுமெனக் கூறியதால், ஐம்பூதச் சேர்க்கையாலாய உலக உயிர்ப்பொருளனைத்தும் கண்டு நகை செயும் என அறிவுறுத்தியுள்ளது குறள். வழுக்கும் நிலத்தே வயது சென்ற முதியோன் கோலின்றி அந்நிலத்தைக் கடக்க நேரின் இடர் பல நேரும். கோலுடையனாயின் அக்கோல் ஊன்றுதற்கு உறுதியாகி இன்புறுதற்கேதுவாம். அதுபோல அரசியலிலே பல்குழுவும், பாழ் செய்யுமுட்பகையும், வேந்தலைக்குங் கொல்குறும்பும் மிகுந்து, அல்ல

லுறுத்துங்காலே அவற்றைப்போக்கி ஆக்கம்புரிய ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் ஊன்று கோலாய் நின்று உறுதி பயக்கின்றது. இதனையே வள்ளுவர்

"இழுக்க லுடையுழி ஊற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையாாவாயச சொல்"

என்று அறிவுறுத்திச் சென்றுள்ளார். ) மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி; மன்னனுயிர்த்தே மலர்தலையுலகம். அதனால் முடியரசாயினும் குடியரசாயினும் குடிகட்குரிய தலைவன் எந்நிலையினும் ஓர் எடுத்துக்காட்டாக இலங்குவானாயின், அவனும் அவன் நாடும் நாவலராற் சிறப்பிக்கப்பெறும். உரிமையை அடைய முயலுதல் உலகியலாயினும் கடமையைச் செய்யத்தவறாதிருக்க முயலுதலும் உலகியலாம். ஆயின் உரிமையையடைய விரும்புவோர் பலர். கடமையைச் செய்வோர் சிலரே. அதனால் மக்களுக்குக் கடமையைச் உணர்த்தக் கருதிய ஆன்றோர் "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்றும், 'ஈன்று புறந்தருதல் தாய்க்குக்கடன், சான்றோனாக்குதல் தந்தைக்குக்கடன், வேல்வடித்துக்கொடுத்தல் கொல்லற்குக்கடன், களிறெறிந்து பெயர்தல் காளைக்குக்கடன்' என்றும் உணர்த்திச் சென்றனர். அங்ஙனம் உணர்த்துங்கால் காவலனுக்குரிய கடமையாக ஒழுக்கத்தையே சிறப்பித்து, நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனென நாட்டினர் நாவலர். ஒல்காப்பெரும் புகழ்த் தொல்காப்பியரும், "நடைமிகுத்தேத்திய குடைநிழன் மரபு" என ஒழுக்கத்தை குடையின்மீது ஏற்றிக்கூறுமுகத்தால் மன்னற்குரிய தாக்கிப்போந்தார். இறையடி பற்றி நீடு வாழ விரும்புவார் ஒழுக்க நெறியில் நிற்க வேண்டுமென்பார்,

"பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றா நீடுவாழ வார்"

என்று தேவர் திருவாய் மலர்ந்தருளினர். பல்லாறுகப் பகர்வதென். உலகிற்றோன்றிய உயிர்ப்பொருள்களை வண்டமிழ் நூலார் வகுக்குங்கால் ஒழுக்கத்தை முதலாகக்கொண்டு உயர்திணை அஃறிணையென உணர்த்திச் சென்றனர் எனின் ஒழுக்கத்தின் உயர்வினை அறிஞர் மகிழ்ந்து இன்புறுவாராக.

பொய்யில் புலவன் புகன்ற பொய்யாமொழியின் பொருளுரைகளில் அடங்காத பொருளில்லை. எல்லாப் பொருளுமிதன்பாலுள,

*இல்லாத எப்பொருளுமில்லை. எனவே கற்றதனாலாய பயன் வாலறிவன் நற்றாள் தொழுதலையும், இல்லறத்தின் ஏற்றத்தையும், அதன்வழி நிற்கும் துறவத்தின் தூய்மையையும், பொருட்பாலாம் அரசியலை, படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என ஆறாக அமைத்துக்கூறும் அமைதியினையும், முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சுமுண்ணும்நனி நாகரிகத்தினையும், கள்ளுண்ணாமை, வரைவின்மகளிர் பகுதிகளால் முந்துநூற் கருத்தொடு முரணிநிற்றலையும், இரப்போர் சுற்றமும், புரப்போர் கொற்றமும் உழவிடை விளைக்கும் உரவோன் பெருமையினையும், பிறப்பின் பெற்றி, இரப்பின் இழிவு, மானத்தின் மாண்பு முதலிய இன்னோரன்னவற்றையும், அன்பின் வழியுணர் இன்பத்தினைக் களவு, கற்பு எனக் கூறும் கருத்து வகையினையும் ஆய வள்ளுவர் அருளிய பொருளுரைகளை அறிஞர் அறிந்தின்புறுவாராக.*

*வள்ளுவன் தன்னை யுலகினுக்கே தந்து*
*வான்புகழ் கொண்ட தமிழ்நாடு.*

கற்றதனா லாயபயன் கடவுணெறி ஒழுக்கமறம் பொருளி னாலே
நறறமிழி னினபத்தால் ஞானசம பநதமிக நாட்ட வேதான
பெற்றதிரு வள்ளுவரின் பெயரினாற் பெருந்தொண்டு புரிநது வாழ
உற்றதமிழ் மாணவரின் உயாகழக வெள்ளிவிழா உவந்து வாழி!

*வள்ளுவன் வாய்மொழி தள்ளாது கொள்ளுமின் !*

**வித்துவான். வி. அ. அரங்கசாமி,**
தமிழ்ப்பேராசிரியர்.



# புகையருந்தாமை.



1 புகையும் அனல்கெளவும் புன்தொழிலார் வாழ்க்கை
வகையின்றி வாழ்ந்து கெடும்.

2 கொன்று பிணமாக்குங் கூற்றின் கொடிதாகும்
புன்தொழிற் கன்னே புகை.

3 புகைபோல ஊதுவார் தம்முயிரை நாளும்
நகைபோல விட்டார் நலிந்து.

4 பெருமையென் றெண்ணிப் புகையருந்தும் பேதை
சிறுமை யடையும் சிதைந்து.

5 வானம் கெடுத்துமழை வண்மை இழப்பிக்கும்
ஈனப் புகையென்னும் பேய்.

6 நெஞ்சம்வாய் நீள்கையோ டெய்தும் இனமென்றுங்
கஞ்சுங் கெடுக்கு மது.

7 நலிந்துயிர் வாடினும் நாடிப் புகையை
வலிந்துண்பார் வன்மை பெரிது.

8 ஈமப் புகைக்கொடியில் இன்பம் விழைந்திடுவார்
தாமே உலகின் தடை.

9 பழக்க மெனும்நோய்க் கிரையாய்க் கழிவார்
இழிக்கும் புகைமருந் திட்டு.

10 எனைத்துயர்ந்த சீர்த்திய ரேனுமஃ தென்னும்
புகைத்தொழியும் புன்மை கொளின்.

**வித்துவான் ம. ரா. கிருஷ்ணமூர்த்தி,**
தமிழ்ப்பேராசிரியர்.



# வாழ்க்கைப் படகு.



வெண்மதியின் தண் கதிர்கள் கொள்ளிட மணலின்மீதுபட்டு மணற்பரப்பை வெள்ளித்தகடாகச் செய்துவிட்டிருந்தது. கொள்ளிட நதியில் தண்ணீர் ஒருபுறமாக ஓடியது. இனியமெத்தென்று தவழும் தென்றற் காற்றும் வீசிக்கொண்டிருந்தது. கொள்ளிடத்திற்கு முகாம் செய்திருந்த எங்கள் கல்லூரித் தலைவரவர்களும் நானும், சாரணர்களும் மணற் பரப்பின்மீது படகு வடிவத்தில் அமர்ந்திருந்தோம்.

தம்பியே தங்கப்பா என்படகு
தங்குமாம தண்ணீரில் என்படகு—ஐலசா

என்று பாடி உல்லாசமாகக் கற்பனைப் படகை வெள்ளி மணல்மீது செலுத்தினோம். கற்பனைப் படகைச் செலுத்திய போதிலும் எங்களுடைய கைகள் உண்மையான படகைச் செலுத்துவதில் காட்டும் ஆற்றலை வெளிப்படுத்தின. அதன் பிறகு நாங்கள் அனைவரும் திரும்பி வந்துவிட்டோம்.

அயர்ச்சி மிகுதியால் வந்தவுடன் உணவு உண்டு சற்றுக் கண்ணயர்ந்தேன். உறக்கம் என்னைத் தழுவிக் கொண்டது. படகைச் செலுத்திய எண்ணத்தின் அலைகள் மட்டும் உள்ளத்தில் ஓய்ந்துபோய் விடவில்லை.

இரவு பன்னிரண்டு மணியிருக்கும். எங்கும் நிசப்தம் நிலவியிருந்தது. யாரோ என்னைத் தட்டி எழுப்புவதுபோல் இருந்தது. "ஏனப்பா இவ்வளவு உறக்கம்? களைப்பு அதிகமோ" என்று வினவினார் அவர். நான் அதையும் பொருட்படுத்தவில்லை. "ஏனப்பா, உனக்குக் கற்பனைப் படகைச் செலுத்திவந்ததில் இவ்வளவு களைப்பா? உண்மையான வாழ்க்கைப்படகைச் செலுத்தவேண்டிய நீயா இவ்வாறு அயர்வது? எழுந்திரு." என்று ஓங்கி என் முதுகில் அடித்தார். எழுந்து அமர்ந்தேன். என்முன் நின்றவரைக் கண்டதும் சாரணீய முறையில் வணக்கம் செலுத்தினேன். காரணம். என்முன் நின்றவர் யார் என்கிறீர்கள்? அவரே பேடன் பவெல் துரை அவர்கள். அவர் கூறினார், "வாழ்க்கை என்பது ரோஜா

மலர்கள் பரப்பப்பட்ட பாதை என்று நினைத்தாயா? அன்று. முட்கள் பரப்பப்பட்ட பாதையல்லவா அது!"

வாழ்க்கைப் பாதை முட்கள் மட்டும் நிறைந்துள்ளதல்ல, பல மேடுபள்ளங்களும் பாதாளக் கிணறுகளும் நிறைந்ததுதான், என்று அவர் கூறியதை ஆமோதித்தேன். மேலும் அவர் பேசினார். "சாரணத் தோழனே! உனக்கு வயது இப்பொழுது முப்பத்திரண்டு அல்லவா? முப்பது வருடங்களுக்கு முன் நீ ஒரு சிறு குழந்தை. குழந்தைப் பருவம் என்ற ஒரு சிற்றோடையின் வழியாக உன் சிறிய படகைச் செலுத்தினாய். அப்பொழுது உன்படகு மிகவும் சிறியது. அதைச் செலுத்துவதிலும் உனக்கு அதிக சிரமமில்லை. பெரிய துடுப்பும் தேவையில்லை. ஒரு சிறு கழியினால் அதை உந்தித் தள்ளிச் செலுத்திவிட்டாய். அப்பொழுது உன் படகைக் கவிழ்த்துத் தள்ள, பொறாமைப் பெருங் காற்று வீசவில்லை. அப்படி வீசினால் தான் என்ன? அதைத் தடை செய்யத்தான் இரு பாறைகள்—பெற்றோர் என்ற பாறைகள்—உன் இருபுறமும் இருந்தனவே. அதனால் உன் படகு இனிமையாகவே சென்றது.

எப்பொழுதும் சிற்றோடையிலேயே செல்லுமென்று நினைத்து இன்பக்கோட்டை கட்டிய நீ, திடீரென்று உன் படகு ஒரு நதியை அடைந்துவிட்டதைக் கண்டு திகிலடைந்தாய் அல்லாவா? அதுதான் இருபது ஆண்டுகட்கு முன் உன் நிலைமை! வாழ்க்கையின் இன்ப துன்பச் சூறாவளிகளையோ பொறாமைச் சுழல்களையோ அறியாத இளமைப் பருவம். இளமை உன் கன்னத்தைக் கிள்ளி மகிழ்ச்சியைக் கிளப்பிவிட்டது. உன்னுடைய படகும் ஒரு பெரிய படகாகி விட்டது. இருபுறமும் திரும்பிப் பார்த்தாய். நல்ல பலமான கரைகள்—நண்பர், உறவினர்கள் செல்வம்—ஆகிய கரைகள் இருப்பதைக் கண்டு மகிழ்ந்தாய்! தண்ணீர் ஓட்டமும் மெதுவாகவே இருந்தது. தாய் தந்தையர் ஆதரவு என்ற கயிறு ஆற்றின் நடுவே கட்டப்பட்டிருந்தது, உனக்கு வழிகாட்டியாக, அதைப் பார்த்துக் கொண்டும், அதன் உதவியால், சுழல்களில் அகப்படாமலும், சூறாவளிகளில் சிக்குண்ணாமலும் உன் படகைச் செலுத்தினாய்.

"பாட்டுக் கலந்திடவே பக்கத்தி லோர்
பத்தினிப் பெண் வேண்டும்"

என்ற பாரதியின் காதற்-பாட்டுக்களை உன் வாய் முணு முணுத்தது. அதனால் படகைச் செலுத்துவதில் உனக்குள்ள நோக்கம் குறைந்து படகு, தானே நீர் வழிப்படும் புணைபோற் செல் லும் என்ற எண்ணங் கொண்டாய்! அல்லவா?

உன் கர்வத்தை அடக்கவோ என்னவோ இறைவன் ஆற்றின் நடுவே உனக்கு வழிகாட்டியாக இருந்த கயிற்றை—தாய் தந்தையர் களை—அறுத்து வீழ்த்தினர். கயிறு அறுந்தவுடன் தான் நீ சுய உணர்வு பெற்றாய். தூக்கத்திலிருந்து எழுந்தாய். துடுப்பைத் தேடி எடுத்தாய் துள்ளி விளையாடி ஓட்ட!

எதிர்பாராத விதமாய் உன் படகு கரையோரம் போகவே கரையிலிருந்த ஒரு பெண்—உன் வாழ்க்கைத்துணைவி—படகில் குதித்து விட்டதைக் கண்டாய். திடுக்கிட்டாய்! அல்ல நீ மகிழ்ச்சி யடைந்தாய். ஏன், உனக்கு இனிப் படகை ஓட்டுவதில் பாதி வேலை குறைந்துவிட்டதல்லவா!

வெண்மதி தவழும் அநேக இரவுகளில் வாழ்க்கைப் பட கின் இருபுறமும் அமர்ந்து இரவு பகல் தெரியாது, உன் வாழ்க்கைத் துணைவியுடன் படகை ஓட்டினாய். படகு எதை நோக்கி போய்க் கொண்டு இருக்கின்றது என்பதைச் சிந்தித்தாயா? அல்ல. நதியின் முகத்துவாரமே வந்துவிட்டதே! படகும் அதன் வழியாக சென் றது. வரம்புடைய வெள்ளமாகிய கடலிலே சென்று விட்டது! அப்பொழுதுகூட நீ இன்பவுலகில் சஞ்சரித்துக்கொண்டு இருந்தாய்.

ஓங்கார மிட்டு ஓடி வந்தது ஒரு புயற்காற்று—அல்ல கடல் அலை காற்றுத்தான். அப்பொழுதுதான் உன் படகு 'வாலிபம்' என்ற கடலுக்குள் புகுந்து விட்டதை உணர்ந்தாய். 'சில்'லென்ற தண்ணீர் நிறைந்த காற்று—பொறாமைக் காற்று—உன் முகத்தில் பலதடவை அடித்தது. சூழ்ச்சி என்ற சுறா மீன் உன் படகைக் கவிழ்க்க வாலாலடித்துப் பார்த்தது. பல பொறாமைத் திமிங்கிலங் கள் உன் படகைச் சூழ்ந்துகொண்டன. அப்பொழுது தான் வாழ்க்கை எப்படிப்பட்டதென்பதை நீ உணர்ந்திருப்பாய்! அது தான் சுமார் ஆறு ஆண்டுகளுக்கு முன் உன் நிலைமை, அல்லவா? இப்பொழுது நீ இருக்கும் இடமும் இதுவேதான். இப்பொழுது நீ என்ன செய்யவேண்டும் என்று நான் சொல்வதைக் கவனி.

## "உரிமையே இன்பம்"

இன்ப வாழ்விற்கு அடிப்படை உரிமையுணர்ச்சி. மக்களாக, வாழ விரும்பும் ஒவ்வொருவரும் இதனை உயிரினும் மேலாக ஓம்புவர்; இழக்கும் தருணத்தில் உயிர் கொடுத்தும் காப்பர்.

கூவுதலறியா குயிற்குஞ்சின் குரலுடைய சிறுமி கொட்டும் மழையிலே திரிவதில் அவளுக்கின்பம். 'நோயுறும்' என்றஞ்சும் தாய் இதனை அன்பாகவே தடுக்கின்றனள். ஆனால் சிறுமியோ துடிக்கின்றாள்—அழுகின்றாள். தாயின் நல்லெண்ணம் சிறுமியின் உரிமையுணர்ச்சியைத் தடுக்கின்றது. குழந்தையுள்ளமோ விளையாடும் உரிமை பறிக்கப்படுகின்றதே என்பதால் கலங்குறுகின்றது. இது உரிமையுணர்ச்சியின் பாற்படும் நிகழ்ச்சி; நாம் நாளும் காண்பது.

பகைமன்னன் படையெடுத்து வருகின்றான். எற்றுக்கு? மாற்றானின் உரிமையைப் பறிக்க-இன்பத்தைக் கெடுக்க—வாழ்வினையழிக்க போர்முரசு ஒலிக்கின்றது. உரிமைப் போராட—நாட்டின் மானங்காத்திட வீரர்கள் ஆர்த்தெழுகின்றனர். கடும்போர் நிகழ்கின்றது. குருதிவெள்ளம் பெருக்கெடுத்தோடுகின்றது. யானைகள், சரியும் மலைகளென வீழ்கின்றன. பரிகள் அறுபட்டுச் சிதறுகின்றன. வீரர்கள் முறிந்து விழும் மரங்களென சாய்கின்றனர். பிணங்கள் பெருகுகின்றன. முடிவில்...பகைவரையழித்து, வாகை சூடுகின்றான் படையெடுப்புக்கு ஆளானோன். பறிபடவிருந்த உரிமையை—இன்பத்தை நிலை நிறுத்தினான். பண்டைத் தமிழிலக்கியங்களிலே—வரலாற்றேடுகளிலே பொலிவுறும் இவை போன்ற உரிமைப் போர்கள், மறவரின் வீரச்செயல்கள், அறிவுற்ற வல்லரசுகள் நமக்கு என்றுமே வாழ்க்கை வழிகாட்டிகளாகவே யுள்ளன. இது புறவாழ்வைக் குறிக்கும் உரிமையுணர்ச்சியைப் பற்றியது.

அகவாழ்வைக் குறித்திடும் நிகழ்ச்சிகளை யோர்தல் மிக்க இன்பம் பயக்கும். காரணம் இயற்கைப் பொருள்களின் அழகிலே மூழ்கி மூழ்கித் திளைத்த பழந்தமிழர், படைப்பின் நுண்மையை நுணுகி யுணர்ந்தனர். இயற்கையோடியைந்த வாழ்வு நடாத்தினர். பெண்டிரைத் தெய்வமாகக் கருதினர்—கொண்டாடினர். உரிமையுணர்ச்சி அகவாழ்வின் ஒவ்வொரு கூறிலும் தவழ்ந்தது.

கற்புடை மகளொருத்தியின் இன்னுயிர்க் கணவனைக் கள்வனென்று கொன்றனன் ஒரு மன்னன். கணவனையிழந்தாள் மாசு

நீங்கிட மன்னனிடம் வாதாடினள். தானிழைத்த அநீதியை உணர்ந்தவுடன் மன்னன் உயிர் துறந்தனன். மன்னனையிழந்த பின் தேவி ஒருக்கணமும் வாழ ஒருப்படுவளோ? அவளுயிர்தான் நில்லுமோ? உடன் அவளும் கணவனோடே ஒன்றினள். மாசு களைந்திட்டவளும் தன் கடமை தீர்ந்தவுடன் உயிர் தாங்கினளில்லை. இது நெஞ்சை யள்ளும் 'சிலம்பு' செப்பும் வரலாறு. இதிலிருந்து யாது புலனாகின்றது? பண்டைத்தமிழ் மகளிர் தம் வாழ்க்கைத் துணைவரை உயிரினுமினிய உரிமைப் பொருளாகக் கொண்டனரென்றும், அவ்வுரிமைப் பொருளையிழக்க நேரின் உயிர்தரித்திலரென்னும் பேருண்மையுமன்றோ?

உரிமைப்பொருளாம் கணவனை யிழக்க நேரின் கற்புடைப் பெண்டிர் உயிர்தரித்தலுமரிதென்று கண்டோம். அவ்வுயிரினு மினிய பொருளைப் பிரிந்திட நேரின் யாது செய்தனர்? இதனைக் கபிலர் என்னும் பெரும் புலவனார் அழகுற விளக்குகின்றார்.

பேசும் பொற்சித்திரமென வளர்ந்தனள் ஒரு பெண். வாழ்க்கைத்துணை நாடும் பருவமெய்தினள். பருவத் தென்றல் அவளுள்ளத்திலே இன்பத்தேன் சொரிந்தது கனவிலே சந்தித்த ஒருவனும் இவளுள்ளத்திலே இடம் பெற்றனன். பல சந்திப்புக்கள் இவர்தம் காதலை வளர்த்தன. நாளடைவில் கணநேரப் பிரிவும் 'அவளை' வாட்டிற்று. "தொடிற்சுடின் அல்லது காமநோய்போல விடிற் சுடல், ஆற்றுமோ தீ" என்றரற்றினள்—உள்ளத்தினுள்ளே தான்.

"அருமை மகள் வாழ்க்கை யனுபவம் பெறா இளம்பெண்; எனவே, அவள் ஒழுக்கமுடையவளாய் வாழவைத்தல் தம் கடமை" என்று கருதினர்போலும் அவள் பெற்றோர். அவள் அடிக்கடி வெளியில் செல்லாதவாறு தடுத்தனர். உயிர்த்தோழிகள் சிலருடன் மட்டில் பழகவிட்டனர். மகள் மகிழ தோழிகளுடன் தோட்டத்தில் விளையாடச் செய்தனர். விளையாடுங் களைப்பு தீர இனிய பாலும் தேனுங் கலந்து பருகச்செய்தனர். மகளின் மனம் இவற்றை விரும்புமோ? உரிமையற்ற வாழ்வில் அமிழ்தமே கிடைப்பினும் உள்ளமும் ஏற்குமோ? வயதுற்ற மகளொருத்தி பெற்றோரின் கட்டுப்பாட்டிலே வாழும் வாழ்க்கையை 'இற்செறிப்பு' என்பர். இந்த இற்செறிப்புதான் வளருங்காதற் பயிரை அழித்தலியலுமோ?

பெற்றோரின் இச்செயல்கள் நல்லெண்ணத்தின் பாற்பட்டவையே. மகளின் இன்ப வாழ்க்கையைக் கருத்தில் கொண்டே

இக்கட்டுகளியற்றினர். இந்த நன்னோக்கம் உரிமையைப் பறிப்பதாயமையவே பாவையினுள்ளம் பெற்றோரை வெறுக்கச்செய்தது. சமயம் வந்துற்றபோது எதிர்க்கவும் துணிந்தது.

ஒருநாளிரவில் அவள் இக்கட்டுகளனைத்தையும் உடைத்தெறிந்தனள் - யாவருமறியாமல் தலைவனோடு அவனூர் சென்றுவிட்டனள். சின்னாட்கள் கழிந்தன. பெற்றோரை நாடித் திரும்பிவர நேர்ந்தது. தனியாக வந்தனளா? இல்லை தலைவனுடன்தான் வந்துற்றனள். தலைவனோடு வரும் உரிமையில்லையெனில் பெற்றோரின் துணை நாடி வருவளோ? வாராள்.

ஊர் திரும்பியபோது முதலில் தோழியைக் காண நேர்ந்தது. "நீயும் அவரும் சென்றிருந்தீர்களே, அந்நாட்டில் நீர் கிடைப்பதே அருமை என்கின்றனரே; குடிநீரில்லா ஊரில் எப்படிக் காலங் கழித்தீர்கள்" என்று அவள் உசாவினள்.

முன்பு துயருற்றபோதும் தன்னுள்ளக் கருத்தை தோழிக்கு தலைவி வெளியிட்டனளில்லை. அதற்கு இப்போழ்து நல் வாய்ப்புக் கிடைத்தது. கூறத் தொடங்கினள்:- "தோழி! உன் கூற்று உண்மையானதே. நாங்கள் சென்ற நாட்டில் நீர்ப்பஞ்சமே. எங்கோ ஓரிடத்தில் சிறிது நீர் கிடைக்கும். அந்நீரும் சருகுகள் வீழக்கெட்டிருக்கும். இக் கேடுற்ற நீரும் மக்கட்குக் கிடைப்பதரிது. மான்கள் குடித்துச் சென்ற மீதியே மக்கட்குக் கிடைக்கும். அதுவும் நன்னீரன்று. கலங்குதலுடையதே. எனினும் அந்நீரைத் தான் என்னுள்ளம் விரும்பிற்று. செல்வமகளாக வளர்ந்து நம் வீட்டுத் தோட்டத்தில் பெற்றுவந்த தேன் கலந்த பாலினும் அது இனிமை மிக்கதே" என்றனள்.

தேன் கலந்த பால் உண்மையில் மிக்க இனிமை யுடையதே; தனிச்சிறப்பும் உடையதே. எனினும் உரிமையில்லா வாழ்வில் உரிமையேயன்றி வேறெதுவும் இன்பம் பயக்குமோ? கழி நீரும் உரிமைமிக்க வாழ்வில் இன்பந்தரும் என்பதில் ஐயமேது? இதோ இக்கருத்தினை விளக்கும் செய்யுள்:—

"அனாய் வாழிவேண்டு அன்னைநம் படப்பைத்
தேனமயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு
உவலைக் கூவற் கீழ
மானுண்டு எஞ்சிய கலிழி நீரே" [ஐங்குறு நூறு. 203]

சி. இராமலிங்கன்,
வித்துவான் முதலாண்டு.

———

# கதை:- மன்னிப்பு?

(1)

அதோ! ஏதோ இசையொலி கேட்கிறதே, உள்ளத்தை ஊடுருவும் வன்மை இசைக்கு உண்டுதான். தென்றலில் தவழ்ந்து வந்திடும் இனிய இசையின் இன்பமே இன்பம்! குரல் இனிய குரல். ஆம். ஒரு பெண்ணின் குரலே.

ஆ! பாட்டு நின்றுவிட்டதே! ஒரு முரட்டுக் குரலல்லவா பதிலுக்குக் கேட்கிறது! 'ஓடாதே நில், உன்னை விடமாட்டேன். ஓடாதே நில்......'

'சந்திரா ஓடு, ஓடு. என்னவென்று பார்' என்று கட்டளையிட்டார் அரியநாதர்.

சந்திரன் கிடு கிடுவென்று கீழே குறுக்குப்பாதை வழியாக இறங்கி ஓடிவந்தான். ஆ! அந்தப் பெண் குளத்தை நோக்கியல்லவா ஓடுகிறாள்! அதோ! குளத்தில் குதித்தும் விட்டாள்! சந்திரன் வெகு வேகமாக ஓடினான்; குளத்தில் விழுந்தான்.

அந்தப் பெண் கரையில் படுத்திருந்தாள். சந்திரன் அருகேயிருந்து அவளுக்குச் சிகிச்சை செய்யத் தொடங்கினான். அவள் மெல்லச் சிரித்தாள், திடீரென. சந்திரன் திடுக்கிட்டான். 'எனக்கு நன்றாக நீந்தத் தெரியுமே' என்றாள் அவள்.

"யாரடா அவன்?" அவளைத் துரத்திக்கொண்டு வந்தவன் சீறினான். அந்த முரடனைக் கண்டதும், அவள் உடல் நடுங்கியது.

(2)

"தளவாய், அரியநாதர் விசயநகரத்திலிருந்து புறப்பட்டு வந்து மூன்றே நாட்களாயின. விசயநகரப் பேரரசின் கீழுள்ள சில விடங்களில் மலைக்கோட்டைகள் கட்டவேண்டுமென்பது தளவாயின் திட்டம். கட்டின கோட்டைகளைப் பார்வையிடவே, தளவாய் அவ்வூருக்கு வந்திருந்தார். மாலை மயங்கும் நேரம். தளவாய் அந்த அழகிய கோட்டையைப் பார்வையிட்டுக்கொண்டிருந்தார். அப்பொழுதுதான் மேற்கண்ட நிகழ்ச்சி நடந்தது.

(3)

மறுபடியும் முரடன் குரல் ஒலித்தது. "என் காரியத்தில் நீ யாரடா தலையிடுவது?" வாளையுருவினான் முரடன். இருவருக்கும் வாட்போர் நடந்தது. இறுதியில் முரடனின் கன்னத்தில் சிறிது காயம் ஏற்பட்டது. அவனால் வேதனையைத் தாங்க முடியவில்லை. சந்திரனே வெற்றியடைந்தான்.

அவள் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தாள். இருவரும் சிறிது தூரம் சென்று அருகிருந்த பூஞ்சோலையுள் நுழைந்தனர். "அந்த முரடன் யார்? அவன் உன்னை ஏன் துரத்தினான்?" என்று வினவினான் சந்திரன். அவள் கண்களில் நீர் ததும்பியது. "வெகு நாட்களுக்கு முன் வாணிகத்துக்காகக் கடாரம் சென்றிருந்த என் மாமனுடைய மகன் என்று அவன் தன்னைச் சொல்லிக்கொள்ளுகிறான், நான் அதை நம்பமுடியவில்லை. எனக்குத் தாய் தந்தையர் யாரும் இல்லை. என் அண்ணனும் சிறுவயதிலேயே சொல்லாமல் எங்கேயோ ஓடிவிட்டான். என் சிற்றப்பாவின் ஆதரவில்தான் இங்கிருக்கிறேன். என் அத்தானைச் சிறுவயதில் கண்டது. அவர் இத்தகைய ஒரு முரடராயிருக்கமாட்டார். இம்முரடன் பத்து நாளைக்கு முன்புதான் இங்கே வந்தான். அவனைக் கண்டாலே எனக்கு அச்சமாயிருக்கிறது. என் சிற்றப்பாவுக்கும் கொஞ்சம் ஐயந்தான். என் அத்தானுடைய சாயல் சிறிது அவனிடமிருக்கிறதாம்" என்று கூறினாள் அவள். அவளது கண்களில் நீர் துளிர்த்தது.

அவளும், சந்திரனும் தளவாயிடம் சென்றனர். அவர் அவளிடம் மிகவும் அன்பு பாராட்டினார். "நீ நமது பாதுகாப்பில் நலமாயிருக்கலாம் அம்மா, கவலைப்படாதே" என்று தேர்தல் கூறினார் தளவாய்.

வாயில் மணி ஒலித்தது. வரலாம், என்றார் தளவாய். "அமைச்சரே ஒற்றர்கள் பெருகிவிட்டார்கள். அயலானொருவன் சுரங்க வாயிலிலிருந்து ஓடினான். வீரர்கள் அவனைத் துரத்திச் சென்றும், அவன் எப்படியோ மறைந்துவிட்டான்" என்று கூறினான் சந்திரன். அரியநாதரே விசயநகரப் பேரரசின் முதலமைச்சராகவும் விளங்கினார். "சந்திரா, வடக்கே முடங்கிக்கிடந்த முகம்மதியர்களுக்கு அவ்வளவு துணிச்சலா? நம்மை என்ன செய்ய முடியும் அவர்கள்? தோள்வலியும், வாள் வலியும் நமக்குண்டே. ஆமாம்,

அவர்கள் சூழ்ச்சிக்காரர்கள். முரடர்கள். நாம் எச்சரிக்கையாகத் தானிருக்கவேண்டும்." என்றார், அரியநாதர்.

ஒரு மாதம் உருண்டது. சங்ககிரிக்குச் செல்லலாம் என்றிருந்தார் தளவாய். வாயிலில் ஓரே இரைச்சல் கேட்டது. ஒரு பெண்ணைத் தர தரவென்று இழுத்து வந்துகொண்டிருந்தனர், வீரர்கள். "அவளை விடுக" என்றார் அரியநாதர். வீரர்கள் கேட்டபாடில்லை. அவளை இழுத்துக்கொண்டு வந்து தளவாய் முன் நிறுத்தி அவளது ஆடைகளையெல்லாம் களைந்தனர். என்ன வியப்பு! ஒரு ஆண் மகன்! ஒரு துண்டோடு நின்றிருந்தான்.

சந்திரன் வந்தான். அது என்ன கன்னத்தில் ஒரு காயம்! சந்திரன் துள்ளிக் குதித்தான். பெண்ணாக வந்தவன் சிறையிலடைக்கப்பட்டான்.

"ஆம்! அவன் ஒரு ஒற்றனாகத் தானிருக்கவேண்டும். அவனைப் பார்த்தால் முகம்மதியனாகத் தோன்றவில்லையே, அன்று அந்தப் பெண்ணிடம் உரிமை கொண்டாடினான். இன்று பெண் வேடம் பூண்டு, ஏதோ ஒற்றறிய வந்தான். அன்றொரு நாள் சுரங்க வாயிலிலிருந்து ஓடினவன் இவனாகவும் இருக்கலாம். அவனை யாரென அறிந்தாகவேண்டும்." இங்ஙனம் எண்ணினான் சந்திரன்.

(4)

என்ன அருமையான இசை! தெய்வீக இசை! இசை வயப்பட்டு மயங்கினான், சந்திரன். கோட்டையிலிருந்து இறங்கி அப்பெண்ணை நோக்கி நடந்தான். அவள் பின் சென்று கண் பொத்தினான். வாயால் சொல்லமுடியாத இன்பம்! இருவருக்குந்தான்.

முழு நிலவு ஒளி யுமிழ்ந்தது. குளத்தின் நடுவில் ஓர் அழகிய வசந்த மண்டபம். அதில் இருவர். அவள் இசையை எழுப்பினாள். யாழின் இசை உள்ளத்தெழும் எண்ணங்களைக் கூறும் தன்மை வாய்ந்ததல்லவா! நேரம் இன்பமாகச் சென்றுகொண்டிருந்தது.

நள்ளிரவு! தூக்கம் வராமல் சந்திரன் உலாவிக்கொண்டிருந்தான். ஆ! ஆந்தை அலறுகிறதே, என்ன இன்னல் நேரிடுமோ? அது என்ன? தளவாயின் அறையில் இவ்வேளையில் வெளிச்சம். ஏதோ அரவம்!

சந்திரன் சடாரென்று உள்ளே நுழைந்தான். சிறையி லிருந்த முரடன் வாளை அரியநாதரின் கழுத்துக்கு நேரே நீட்டிக் கொண்டிருந்தான். அரியநாதர் அமைதியாகத் தூங்கிக்கொண்டிருந் தார்! பின்புறம் வந்த சந்திரன் சிறிதும் தாமதிக்காமல் முரடனை அப்படியே பிடித்துத் தூக்கிக் கீழே யெறிந்தான். சத்தம் கேட்டு அரியநாதர் விழித்துக்கொண்டார். நடந்ததை யறிந்தார். அடுத்த நாளுக்கு மறுநாள் அவனைத் தூக்கிலிடும்படி ஆணை பிறந்தது.

மலை நடுவில் மகேந்திரவர்ம பல்லவன் கட்டிய அரங்கநாதர் ஆலயத்திலிருந்து, மேலே மலைக்கும், கீழே நரசிம்மமூர்த்தி ஆலயத் துக்கும் சுரங்கப்பாதை செல்கிறது. அது தவிர, வேறு சுரங்கப் பாதைகளும் உண்டு. இதையெல்லாம் கண்டுபிடிப்பதற்கும், கண்டு பிடித்தவற்றைச் செப்பனிடுவதற்குமே, அரியநாதர் கோட்டையில் தங்கவேண்டியிருந்தது.

அந்த நாள் வந்தது. அவைக் களத்தில் எள்விழ இடமில்லை. ஒற்றன் தூக்குமேடை மீது ஏறினான். 'உன் கடைசி ஆசை என்ன?' என்று கேட்டார் தளவாய். முரடனின் மூளை வேலை செய்தது. 'கோட்டைச் சுவர்மேல் நின்று ஊரை ஒரு முறை பார்க்கவேண்டும்' என்றான் முரடன். அனுமதி கிடைத்தது. கோட்டைச் சுவர்மேல் ஏறினான், உடனே கீழே குதித்துவிட்டான்.

அவன் துகள் துகளாயிருப்பான் என்றே எண்ணினர் எல் லோரும். கீழே குளம். அதனால்தான் அவன் கோட்டைச் சுவர் மேல் ஏறி, ஊரைப் பார்க்கவேண்டுமென்றது.

குளத்தில் விழுந்த முரடன் நீருள் மூழ்கிக்கொண்டே வெகு தூரம் சென்று வசந்த மண்டபத்தின் ஒரு புறத்தில் பதுங்கிக் கொண்டான். வீரர்களா விடுவார்கள்? அவனுடைய செய்கைக்காக அவனைச் சித்திரவதை செய்யும்படி உத்திரவிட்டார், தளவாய்.

உதவித் தளபதி சந்திரன், குதிரைச் சவுக்கை எடுத்தான். தலைவர் ஆணையை நிறைவேற்றத் தொடங்கினான். வேதனை தாங்க முடியாது, முரடன் "அம்மா......தங்கை......சித்திரா......" என்று முனகினான். இதைக்கேட்ட உதவித் தளபதி திகைப்படைந்தான். "நீ யார்? சித்திரா யார்? உன் தங்கை யார்?" என்று வினவினான் சந்திரன். "நான்......என் தங்கை கலாவதி......மனைவி சித்திரா...

நான்-சேந்தமங்கலம்......" உறைவாள் நழுவியது. சந்திரன் மரம் போல் நின்றான்.

(5)

"உன்னை மன்னித்தோம், திருந்தி விடுவாயோ?" என்று கேட்டார், அரியநாதர்.

கருணாகரன் சுகமடைந்து வந்தான். அவன்தான்! அந்த முரடன்-அந்தப்பெண் கலாவதியின் தமையன். விதியின் விளையாடல்! தங்கையையே காதலித்தான், அண்ணன்.

இரண்டு தளபதிகளும் அவையில் வீற்றிருந்தனர். கருணாகரன் வணங்கினான். பிறகு தன் வரலாற்றைச் சொல்ல ஆரம்பித்தான். "நாடு காத்திடும் பணியில் தவறாத தளவாய் அவர்களே, தளபதி அவர்களே, வாணிகத்துக்காக வடநாடு போன நான் அங்குச் சுகமாகவே வாழ்ந்தேன். எனக்கு ஒரு நல்ல மனைவியும் கிடைத்தாள். அவள்தான் சித்திரா, அவளும் அகால மரணமடைந்தாள். என் மதியோ சிதறியது, விளங்கச் சொன்னால், நான் ஒரு பைத்தியம். என்னுடைய அறம் என்னவென்பதை மறந்தேன். கலாவதியைத் தவிக்க விட்டுவிட்டு ஒருவரிடமும் சொல்லாமல், சந்திரா, நான் வடநாடு சென்றேன். அப்பொழுது கலாவதிக்கு வயது ஐந்து தானிருக்கும். இப்பொழுது அவள் மங்கையாயிருக்கிறாள் ... ... பிறகு, துரோக எண்ணம் என் சிந்தையில் புகுந்தது. பிறந்த பொன்னாட்டைவிட்டு, ஆமதுநகர் சுல்தானிடம் ஒற்றன் வேலை பார்த்தேன். எனக்குத் தகுந்த தண்டனை கிடைத்தது. நான் செய்த பாவங்களுக்கெல்லாம் மன்னிப்பே இருக்க முடியாது. நான் மதமாறினேன். இந்துக்களையெல்லாம் படுகொலை புரிந்திருக்கிறேன். கருணையுருவான அல்லாவின் கருணைக்கும் நான் பாத்திரமாக முடியாது. நான் பாவி, துரோகி, பிறந்த நாட்டைக் காட்டிக் கொடுக்கும் என்போன்ற கோடரிக்காம்புகளை என்ன செய்தாலும் பாவமில்லை. எனக்கும் உய்வுண்டோ? பகைவனுக்கும் அருள் சுரக்கும் தமிழ்ப்பண்பாட்டுக்கு ஈடேது? இணையேது? தமிழ் நாடு, என்னைப் போன்ற துரோகிகளால்தான் பகைவரின் கழுகுப் பார்வைக்கு இரையாக நேரிடுகிறது. என்னையும் மன்னித்தல் எவ்வளவு அருமை, அருமை! எனக்குத் தாங்கள் இடுங் கட்டளை எதுவோ?" என்று கூறி உள்ளமுருகிக் கண்ணீர் உகுத்தான்.

'கருணாகரா, இதோ! உன் தங்கை கலாவதி' என்றான், சந்திரன், 'ஆ! என் தங்கையா? என்ன பாவம் செய்தேன், என்று வருந்தினான், கருணாகரன். கலாவதி தன் முரட்டு அண்ணனைக் கட்டிக்கொண்டு விம்மினாள்.

'கலாவதி, உன் அத்தான் யார் தெரியுமா?' என்றான் சந்திரன், 'இதோ என் எதிரில் இருப்பவரே என் அத்தான்' என்றாள் சந்திரனைச் சுட்டிக்காட்டி. 'புதிரெல்லாம் புரிந்தது. உண்மையிலேயே கடாரம் சென்ற உன் அத்தான் நானே' என்றான் சந்திரன். கலாவதியின் மகிழ்ச்சிக்கோ எல்லையில்லை. ஒரு பக்கம், இத்தனை நாட்கள் பிரிந்திருந்த துன்பம். ஒரு பக்கம், ஒன்று கூடினதால் நேர்ந்த இன்பம். இரண்டும் அவள் உள்ளத்தில் கலந்தன.

"ஒருவன் தான் செய்த குற்றங்களை யெண்ணி வருந்தினால், இறைவனின் மன்னிப்புக் கிடைக்கும். கருணாகரா, வருந்தாதே, திருந்தியதால் உன்னை மன்னித்தோம். நமது சேனையின் ஒரு பகுதிக்குத் தலைவனாயிரு". என்று அருள்கூர்ந்தார், அரியநாதர். அளவிறந்த கருணை! சந்திரனுக்கும், கலாவதிக்கும் கண்களில் நீர் துளிர்த்தது.

(6)

செந்தாமரை சிரித்தது. வண்டு இசைபாடிக் கொண்டு வந்து, அதன் இதழில் அமர்ந்து தேனுண்டது. மகரந்தம் உதிர்ந்தது. கலாவதி பொலிவுடன் விளங்கினாள்.

அதோ இசையொலிகேட்கிறது. மலையிடங்கள் அதை எதிரொலிக்கின்றன. என்ன இன்பம்! வசந்த மண்டபத்தில் நிலவொளியில் இரு உருவங்கள் தெரிகின்றனவல்லவா?

ஒரே கல்லான நாமக்கல் மலையின் தோற்றம்! உலக அதிசயம்! மலைமேல் கோட்டை. கீழே குளம். நடுவில் வசந்த மண்டபம். அருகே பூங்கா. என்ன தோற்றம்! அழகிய தோற்றம்! மறக்க முடியாத தோற்றம்!

(7)

நாமக்கல் குன்றத்தின் மேலுள்ள கோட்டையில், இன்று இடிந்து பாழடைந்த சில கட்டடங்களையே காணலாம். சுரங்கங்கள் அடைபட்டிருக்கின்றன. அதில் மனிதர்களின் உயிர்குடிக்கும்

அரக்க வண்டுகள் வாழ்கின்றனவென்று ஒரு சிலர் சொல்லிக் கொள்ளுகிறார்கள். விசயநகரப் பேரரசு மிக உன்னத நிலையில் இருந்த போது கிருஷ்ணதேவராயரின் ஆட்சி நடந்து வந்தது. அவர் ஆட்சியில் அமைச்சராகவும், தளவாயாகவும் அரியநாதர் விளங்கினார் என்று வரலாறு கூறுகிறது.

**ந. சபாபதி,**
வித்துவான், 2ம் ஆண்டு.

---

# பாரி மகளிர்

**(ஓர் இலக்கிய நாடகம்)**

காட்சி க.

*இடம்:* **பாண்டியன் அரசவை** *(தனியிடம்)*
*நடிகர்:* **சேரன், சோழன், பாண்டியன், காவலன்.**

*பாண்டியன்:-* (தனிமையில்) பாரி! அஃகா...கா (சினச்சிரிப்பு) பாரி! சிறுநாட்டான் என்னை அவமதித்து விட்டானே! செல்வத்திலே சிறியோன், என்னினும் புகழில் மேம்பட்டவனா? பறம்புநாடன் பாண்டிநாட்டானைப் பழிப்பதா? சிங்கத்தைச் சிறுநரி எதிர்ப்பதா? முடியாது, முடியாது, முக்காலும் முடியாது. பாண்டியனுக்கு வேண்டியதைக் கொடுக்கத்தானே இருக்கிறான். அன்போடு வேண்டினேன் அங்கவையை மறுத்து விட்டான் மடையன்......அவளை அடைய வழி? (எண்ணி) போர்! ஆம், போர் மேற்சென்று இறுமாப்பை அடக்குதல்; இன்றேல் சூழ்ச்சியால் கொல்லுதல்; ஒன்றைச் செய்தாற்றான் என் புகழை நானிலத்தில் நிலைநாட்ட முடியும்.

*காவலன்:-* வேந்தே! சேரமான் வருகிறார் (சேரர்பெருமான் வருதல்)

*சேரன்:-* (வணங்கி) தென்னாட்டுத் தலைவ! வணக்கம். மிக்குடையான் எவனேயாயினும் அவனை எதிர்த்தே தீரவேண்டும். வெற்றியும் தோல்வியும் ஒருவர் பங்கல்ல. மாற்றானது வலி, மெலி தெரிந்தே செயல் நலம். அதுவே மாமன்னராகிய நமக்குச் சிறப்பு; வெற்றி.

பாண்டியன்:- அப்படி நம்மை அவமதித்த அந்த நாடோடி யார்?

சேரன்:- அவன்தான், குறும்பு பிடித்த பறம்புநாட்டுத் தலைவன் பாரி. பாரியாம், வள்ளலாம், முல்லைக்குத் தேரைக் கொடுத்தானும்; பல்லைக் காட்டுகிறார்கள், ஒன்றும் தெரியாத மக்கள்.

பாண்டியன்:- அவனை வெல்லவே நம் திட்டம். உம்மையிகழ்ந்தது போலவே எம்மையும் இகழ்ந்தான். அறிவை அறியாத அற்பன். வெற்பா! நம்மை மதியாதான் செருக்கை மாய்க்கவேண்டும். இதற்கு உமது விருப்பம்?

சேரன்:- நான் தயார். அவன் ஆணவத்தை அழித்தல் நம் வாழ்வின் வழி. பயிருக்கு வாழ்வு களைகளைக் களைதல். முடிமன்னரின் குடியாட்சி அதுவே.

பாண்டியன்:- இதற்கு வழி? பாரி படைபலம் மிக்கவனாயிற்றே?

சேரன்:- அவன் படைபலம்-பணபலமெல்லாம் நம் மறவாளுக்கு முன் நிற்காது நண்பரே.

பாண்டியன்:- ஆம்! போர் தொடுத்துத்தான் அவன் புகழ்ப் போர்வையைக் கிழித்தெறியவேண்டும்.

காவலன்:- வேந்தே, சோழமன்னரும் வருகிறார்.(சோழன் வருதல்)

சோழன்:- போர் என்றீர்களே. எங்கே? எதற்கு?

சேரன்:- அங்கேதான், நம்மை எதிர்த்துப் பேசும் வீணன், பாரியின் வீரத்தை எடைபோடத்தான்.

பாண்டியன்:- வளவ! வருக! வருக! எதிர்பார்த்தபடி நீரும் வந்துவிட்டீர். நன்று, பறம்பு மலையான் நம்மைப் பழித்துப் பேசியதை நீவிர் அறிவீரோ?

சோழன்:- நன்கறிவேன்-மகளைப் பெற்றுவிட்டோமென்று மமதை கொள்ளுகிறான் பயடையன். அறிவை அறியாத அசடன். அவன் துடுக்கினை தூளாக்கவேண்டும். நாளைப் போரில் நம் காலில் மண்டியிடவேண்டும்.

சேரன்:- ஆம் துறைவ! அதற்கே நாங்களும் வழி வகுத்தோம். நாம் மூவரும் அவனைப் போரில புறங்காணவேண்டும்.

சோழன்:- நன்று! நன்று! அவ்வீணனின் வீரத்தை நாம் அறிய மாட்டோமா? நாயை அடிக்கக் குறுந்தடியா! புவியெலாம் பரவும் நம் புகழைத்தடுக்கும் அந்தப் புல்லனைக் கெல்லியெறிய வேண்டும். நாளையே பறம்பு மலையும் நாடும் நமதாகவேண்டும்; பறம்பு மலையில் மூன்று கொடிகளும் பறக்கவேண்டும்.

பாண்டியன்:- சோழா! சூழ்ச்சி நன்று! காலம் கடவாது போர்க் கோலம் பூண்டு வருக.

[சேரனும் சோழனும் போகிறார்கள்]

(தனிமையில்) ஒழிந்தான் பாரி, அழிந்தது அவன் செருக்கு. பறம்பின் முந்நூறு ஊரும் நாளை மூவேந்தரது. (கேலியாகச் சிரித்தல்). அஃகா...கா...கா...யாரங்கே? (தளபதி வருதல்) நாளை நம் நாற்படையும் பறம்பு மலையை முற்றுகையிட ஏற்பாடு செய்.

தளபதி:- அப்படியே அரசே!

(திரை)

காட்சி ௨.

இடம்:- பாரி அவை.

நடிகர்:- பாரி, கபிலர் (அவைப்புலவர்), பரிசிலர்.

பாரி:- செந்தமிழ்ப் புலவரே! சீரிய நண்பரே! மகளிரை மணக்க வந்த மன்னர் மூவரையும் மறுத்தனுப்பிவிட்டோம். அதனால் ஏது நிகழ்வதுளதோ?

கபிலர்:- கவலற்க மன்னா! புகழுடையோன் எது வேண்டினும் கொடுக்கத்தான் வேண்டுமோ?

பாரி:- அப்படி ஒன்றுமில்லை. கொடுக்கலாம், ஆனால் அவர்களோ மூவர். நம்மிடம் இரு பெண்களே உள்ளனர். எப்படி முடியும்; மூவரும் நண்பர்கள். அதில் யாரைப் பகைத்துக் கொள்வது?

கபிலர்:- ஆம், உண்மைதான். கொடுப்பது உறுதியானால் கொள்வது பகையே. இந்நிலையில் யாரைவேண்டி யாரைப் பகைப்பது? கொடுத்தும் பகை உண்டாவதைவிட கொடாமலிருப்பதே நல்லது மன்ன.

பாரி:- ஆம், புலவரே பகை ஏற்பட்டுவிட்டது. இனிமேல் வருவதைத் தாங்க வன்மை வேண்டும்.

கபிலர்:- அரச! அஞ்சற்க. வஞ்சனையாலும் வளமிக்க பறம்பை ஏதும் செய்யமுடியாது. நாடா வளத்தது பறம்பு நாடு. நும் வீரமும், புகழும் அவர்கள் அறியாதனவா? அப்படி அம் மூவேந்தரும் பறம்பைப் பல நாள் முற்றுகையிட்டாலும் மக்கள் பசியின்றி வாழ வளம் உள்ளது. எதற்கும் அஞ்சற்க.

[பரிசிலர் வருதல்]

புலவன்:- முல்லைக்குத் தேரீந்த பறம்பின் கோமானே! இல்லை யென வந்த எனது வறுமையை யகற்றி நீடூழி வாழ்க!

பாரி:- புலவரே, தமிழுக்கே உழைப்பீராக. (பொற்கிழி தருதல்)

புலவன்:- மாரியினும் சீரிய பாரி வள்ளலே, நுமது கொடைத்திறங் கேட்டு வந்தோம். எமது வறுமை யகற்றி பெருமை கொள்வீராக.

பாரி:- செந்தமிழ்ப் புலவரே சிறந்து வாழ்க. (பரிசளித்தல்)

விறலி:- காண்பவரே யன்றிக் காணாதாருக்கும் கட்புலனாகும் புகழ் மேம்பாடு உடையவனே, எனக்குப் பொருளளிக்க வேண்டுகிறேன்.

பாரி:- கலைஞரே! கலையை வளர்ப்பீராக. (பொருள் கொடுத்தல்)

கபிலர்:- என்னே வள்ளலின் கொடைத்திறன், மாரியினும் சிறந்த வன் பாரி. உண்மை பழுமரம் தேடிவரும் பறவை போன்ற பரிசிலர்க்கு வரையாது அளித்தலால் எல்லாம் போயின. எஞ்சியன ஒருசில.

பாரி:- கவலற்க. தமிழன்ப. வறுமையால் வாழக்கூடாது. வறுமை நீங்கினால் மொழி வளம்பெறும். மொழியால் நாடு சிறக்கும். நாட்டால் மக்கள் சிறப்பார்கள். மக்களால் மன்னன் சிறப்பான். எவ்வகையினும் தமிழ்மொழியும் தமிழ்நாடும் சிறக்க வேண்டுமென்பதே எனது பேரவா.

கபிலர்:- வேந்த! பெருவிருப்பைக்கண்டு பெருமை கொள்கிறேன். புலவரைக் காப்பதே புரவலன் கடமை. செல்வத்தின் பயன் ஈதலே. வாழ்க நின் கொடைத் திறம். வாழ்க நின் குலம்.

காட்சி ௩.

இடம்:- நகர்ப்புறம் (காடு)

நடிகர்:- அங்கவை, சங்கவை, கபிலர்,

[கபிலரும் பாரிமகளிரும் களைப்பால் அமர்ந்திருக்கின்றனர். பறம்பு மூவேந்தர் கைப்பட்டது. பாரி வள்ளல் சூழ்ச்சியால் கொல்லப்பட்டான். பாரியின் மனைவியும் கணவனோடு உயிர் துறந்தாள். பசி மூவரையும் வாட்டுகிறது.]

கபிலர்:- முல்லைக்குத் தேரீந்த பாரீ! உன்னைப் பிரிந்து உயிர் வாழ்வதெப்படி? உன் மக்கள் வாழ்வு என்னுவது? இதோ பார், உன் அருமைக் கண்மணிகள் கலங்கிக் கண்ணீர் விடும் நிலையை. தந்தையை யிழந்து தாயையுங் காணாது தவிப்பதைப் பார். (கண்ணீர் விடுதல்)

பாரிமகளிர்: (பாடுதல்)

"அற்றைத் திங்கள் அவவெண்ணிலவின்
எந்தையு முடையேம் எம்குன்றும பிறர்கொளார்
இற்றைத திஙகள் இவ்வெண ணிலவின
வெனறெறி முரசின வேநதரெங் குனறுங
கொணடாா யாம எந்தையுமிலமே." (கலங்குகிருள்)

சங்கவை:- அக்கா! அதோ நம் பறம்புமலை அழகிழந்து தோன்றுவதைப் பார். ஐயோ நாம் அடைந்த நிலை என்னே! (அழுகிருள்.)

கபிலர்:- கலங்காதீர் கண்மணிகளே! தேனெழுகும் பறம்பு இனி காணுகும் காட்சி. சோலை மிக்க நாடு இனிப் பாலைநிலமாம். ஐயோ! (அழுதல்) வறுமையை வாட்டிய பாரியின் மக்களை வறுமை வாட்டும் நிலை! ஏ, பறம்பு நாடே! உனக்கு வந்த வாறென்னே!

அங்கவை:- அந்தோ செல்வத்தில் உழன்ற நாம் இப்படிச் சீரழிந்து அலைவது சரியா? பஞ்சணையில் புரண்ட நாம் பாழும் புழுதியில் கிடப்பதுதான் முறையா? அற்ருர் அழி பசி தீர்த்தல் அன்று. அல்லலுற்று அவதிப்படுவது இன்று.

சங்கவை:- ஏ, பறம்புநாடே, நாங்கள் உன்னை என்ன செய்தோம்? ஏன் எங்களை விரட்டி விட்டுச் சூழ்ச்சிக்காரர்களின் ஆட்சிக் குட்பட்டிருக்கிருய்? நாங்கள் வாட நீ வாழலாமென்ற எண்ணமா?

கபிலர்:- பாரியை இழந்த பறம்புநாடு இனிச் சீர்பெறுவது முடியாது. வளம் பெருகிய பறம்பு இனிது வாழட்டும். அதை வையாமல் வாழ்த்தியே செல்வோம். வாருங்கள் போகலாம்.

(திரை)

காட்சி ௪.

இடம்:- **விச்சிக்கோ அவை**

நடிகர்:- **விச்சிக்கோ, கபிலர், பாரிமகளிர்.**

விச்சிக்கோ:- கவிஞரே, வருக ! வருக !! அமர்க !

கபிலர்:- (வருத்தத்துடன்) அரசே ! விச்சிக்கோவே ! பகைவர் இல்லையாக, மிகுந்த விளையுளையுடைய மன்னவா ! யான் ஓர் அந்தணன். இவரோ கொல்லையில் படர்ந்த முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியின் மகளிர். இம்மாணிக்கங்களை மணிமுடி வேந்தர் மூவரும் மணக்கவேண்டினர். பாரி மறுக்க சூழ்ச்சியால் கொன்று நாட்டை ஆட்சி செய்கின்றனர். வேந்தே யான் கேட்பது இவரை நீர் மணக்கவேண்டும் என்பதே.

விச்சிக்கோ:- என்ன, என்ன ? மணந்து கொள்ளுவதா ? மூவேந்தருக்கும் அடங்கிய நான் முரணைக் கொள்ள முடியுமா ? மணங்கருதி பகை கொள்ளுதல் நகைதருமன்றோ ?

கபிலர்:- அரசே, அடைந்தாரை ஆதரித்தல் அரசர் கடன். வேளிர் குலத்தான் என வேண்டினேன். பரிசிலர்க்கு வாயிற் கதவடைத்தோன் வழித் தோன்றல் என்பதை அறியாது வேண்டியது என் குற்றம்.

விச்சிக்கோ:- புலவரே, போதும் பாராட்டு, நிறுத்தும்.

கபிலர்:- தலைவ ! பெண்ணென்றால் பேயுமிரங்கும், ஆயின் பெண் கொலை புரிந்தவன் மரபிலுதித்தோன் நீ. இரக்கம் இருக்குமா? விதையொன்று போட சுரையொன்று முளைக்குமா ? நன்று. நாங்கள் வருகிறோம்.

(திரை)

காட்சி ௫.

இடம்:- **இருங்கோவேள் அவை.**

நடிகர்:- **இருங்கோவேள், கபிலர் பாரிமகளிர்.**

[கபிலரும் பாரிமகளிரும் வருந்திய நெஞ்சோடு அவையில் நுழைதல்]

இருங்கோவேள்:- பொய்யடிமை யில்லாத புலவரே ! தங்களைக் காணப்பெற்ற நாளே நன்னாள். அணையில் அமருங்கள்.

புலவரே! வேண்டியது யாது? பூங்கொடிபோல் நிற்கும் இப்பூவைமார் யார்? இவர்கள் அனலிலிட்ட அலரென வாடி நிற்பானேன்?

கபிலர்:- அண்ணலே! இவரே இரப்போர்க்கு இல்லையென்னுது ஈந்து முல்லைக்குத் தேரைத் தந்த வேள் பாரியின் மகளிர். முடிமன்னர் மூவரின் சூழ்ச்சியால் பெற்றோரை இழந்து புலம்பி நிற்கின்றனர். யான் இவர்தம் தந்தையின் தோழன். ஆகலின் இவர்கள் என் மகளிர். அந்தணன், புலவன், கொண்டு வந்தேன். மறுக்காமல் மணக்க ஏற்றருள்க. யான் இரந்து வேண்டுவது இதுவே.

இருங்கோவேள்:- புலவர்ப் பெருந்தகையே! நீர் வேண்டுவதற்காக இவரை ஏற்ருல், துஞ்சுபுலி இடறிய சிதடன் போல இடர்ப் பட நேரிடும். குறுநிலமன்னன் மூவேந்தரது பகையைப் பெறுவது முறையா? எனவே என்னை இத்தகைய துன்பத் திற்கு உள்ளாக்குதல் தக்கதோ? அஞ்சுகிறது நெஞ்சு. ஆவது யாது?

கபிலர்:- மன்ன! நின் கோழைத்தனம் இருந்தவாறென்னே! புலிக்குத் தன் காடென்பதும் பிறர் காடென்பதும் இல்லை. அதனை நின்பாற் கண்டேன். தன்னைப் புகழ்ந்து பாடிய கழாத் தலையரை இகழ்ந்தான் உன் முன்னோன். அதனால் அரையம் அழியப் பெற்ருன். அதனையும் அறிக. யானும் ஒரு புலவனே. இகழ்தல் இயல்பே, வருகிறேன். நீவிர் நீடு வாழ்க! வெல்க நின் நெடு வேல்.

இருங்கோவேள்:- மன்னிக்க வேண்டும், புலவர் பெருமானே!

[கபிலர் பாரிமகளிருடன் வெளியேறுதல்.]

(திரை)

காட்சி ௬.

இடம்:- **அந்தணர் இல்லம்.**

நடிகர்:- **பாரிமகளிர், அந்தணர், ஔவையார்.**

[பாரி மகளிரை யாவரும் மணக்கத் துணியாததைக் கண்டு மனம் நொந்து கபிலர் வடக்கிருக்கச் சென்றுவிடுகிருர். பாரி மகளிர் அந்தணர் இல்லில் வாழ்கையில் ஒருநாள்.]

ங்கவை:- அக்கா! கபிலர் பெருமானும் கைவிட்டகன்ருர். இனி நம் கதி என்ருவது?

அங்கவை:- அந்தோ! (அழுதல்) வள்ளலைப் பிரிந்து வாழ்வதை எண்ணுத கபிலரும், வடக்கிருந்து உயிர்துறக்கச் சென்றுவிட்டார். ஆதரவற்ற நாம் ஐயோ! பட்டகாலிலே படும் கெட்ட குடியே கெடும் என்ற பழமொழியே நிலையாகிவிட்டதே.

சங்கவை:- 'பாரி, பாரி' என்று பார்புகழப் பெற்றவரின் மக்கள், பராரிகளாய் வாழ்வது முறையோ? அக்கா! நாம் இருப்பதிலும் இறப்பதே மேல்.

அங்கவை:- தங்காய்! தன் மானமழியாது தகுநிலையுறுவது உறுதி. கலங்காதே.

அந்தணர்:- (வந்து) குழந்தைகளே! கவலைப்படாதீர்கள். இழந்த உங்கள் வாழ்வு ஈடேற வழியுண்டு. கலங்காமல், பசித்த நீங்கள் முதலில் புசிக்க வாருங்கள்.

[ஔவையார் மழையில் நனைந்து நடுக்கத்தோடு வருகிருர். பாரி மகளிர் அவருக்குத் தம் நீலநிறப் பட்டாடையைப் போர்த்துப் போற்றுகிருர்கள்]

ஔவை: (பாடுதல்)

''பாரிபறிதககலனும் பழையனோர்க்
காரியன்றீந்த களாககோலும்- சேரமான்
வாராயென வுரைத்த வாய்மொழியும் இமறன்றும்
நீலசசிற்ருடைக்கு நேர் ''

மக்காள், நீங்கள் யார்? ஏன் வருத்தத்தால் வாடி நிற்கின்றீர்கள்? பெண்களால் புகழ்கொண்ட இந்த நாட்டில் உங்களை மதியாதார் யார்?

அங்கவை:- புலவர் பெருமாட்டியே! நாங்கள் முல்லைக்குத் தேரீந்த வேள் பாரியின் மகளிர். மூவேந்தர் சூழ்ச்சியால் தந்தையிறக்க ஊர் ஊராய்ச் சுற்றித் திரிந்தோம். உடன் வந்த கபிலரும் வள்ளல் பாரியின் பிரிவாற்ருது வடக்கிருந்து உயிர் துறந்தார். அரண்மனை வாழ்வு அன்று. ஆனல் இன்று......ஆதரவற்ற அனுதைப் பெண்கள்.

ஔவை:- மாரியிற் சிறந்த பாரியின் மக்களே! உங்கள் முழு வரலாற்றையும் நான் நன்கறிவேன். மணக்க விரும்பி வேண்டவிச்சிக்கோவும், இருங்கோவேளும் மறுத்து மொழிந்ததையும் அறிவேன். இவையெல்லாம் உணர்ந்தே வரும் வழியில் தெய்வீகன் என்னும் மன்னனிடம் உங்கள் மணம் குறித்து வேண்டினேன். அவனும் "தமிழ்நாட்டு மூவேந்தரும் முரணுகாது உடனிருந்து மணத்தை முடித்து வைப்பாராயின் தான் பாரி மகளிரை மணந்துகொள்வதில் தடை இல்லை" என்று விடையளித்தான். மன்னர் மூவர்க்கும் மணஓலை எழுதி அனுப்பியுள்ளேன். திருமுகங் காணும் அவர்கள் தெய்வீகன் அரண்மனை வந்து சேர்வர். வாருங்கள் நாமும் அங்குச் செல்லலாம்.

சங்கவை:- அம்மையே! நீங்கள்தான் கைவிடப்பட்ட எங்கட்கு உறு துணையாக இருந்து உதவிசெய்யவேண்டும்.

அங்கவை:- ஆம் தாயே! எங்கள் குடிப்பண்பை அறிந்த நீங்களே எங்கட்கு உற்ற துணை. ஆமாம், மணத்திற்கு மூவேந்தரும் மறுக்காது பகைமையை மறந்து வருவார்களோ?

ஔவை:- அதற்கு நானிருக்கிறேன். இந்தக் கிழவியின் சொல்லைக் கேளாதத் தமிழன் தமிழகத்தே ஒருவனுமேயில்லை. துன்பம் நீங்கி இன்பத்தைக் காணுங்கள்.

சங்கவை:- புலவர் பெருமாட்டியே! வாருங்கள் உணவு உண்டு உடல் சோர்வு நீங்கிப் பின் தெய்வீகன் நாடு செல்லலாம். வாருங்கள், உள்ளே.

ஔவை:- மரமேயன்றி அதன் கன்றும் கனியுதவுகிறது. வாழ்க நீவிர்.

(திரை)

காட்சி எ.

இடம்:- தெய்வீகன் அரண்மனை.

நடிகர்:- ஔவை, பாரிமகளிர், தெய்வீகன், சேர, சோழ, பாண்டியர்.

[மூவேந்தரது முன்னிலையில் பாரிமகளிரின் திருமணம் இனிது நடந்து முடிகிறது. எல்லோரும் கூறும் வாழ்த்தொலிகள்.]

ஔவை:- (வாழ்த்துதல்) தார்வேந்தே! இம்மகளிருடன் நீவிர் குடிமக்கட்கு உயிர்போன்று நீதியுடன் நெடிது வாழ்வீராக.

(பாரிமகளிரை நோக்கி) மாசில்வேள் குலத்து மாமணிகாள்! நீவிர் கணவன் சொல்லுக்கு மாறுபடாமல் அன்பு கொண்டு திட்பமாக மக்களைப் பெற்று பல்லாண்டு வாழ்வீர்களாக. (மூவேந்தரை நோக்கி) மூவேந்தர்களே! கிழியென் கவிக்கும் பெரு மதிப்புத் தந்து பகைமை நீங்கி நட்பு ஓங்க, மணத்திற்கு வந்து மகிழ்வித்துத் திருமணத்தை இனிது முடித்துத் தந்தமைக்கு எனது நன்றி கலந்த வணக்கம். உங்கள் வாழ்வு வளம் பெறுவதாக. வாழ்க உங்கள் முக்கொடி.

மூவேந்தரும்:— வாழ்க மணமக்கள்! வாழ்க தெய்வீகன்! வாழ்க பாரிமகளிர்! வாழ்க தமிழ்நாடு! முழங்குக முத்தமிழ்.

(திரை)

சொ. இராசன்,
முதலாண்டு.

## சாந்தி யடைய வழி ?

கவிமணியவர்களின் 'பாட்டுக்கொரு புலவன் பாரதியடா' என்ற பண்ணில் அமைக்கப்பெற்றது.

---

1) சாந்தத்துக் கொருவன்மை காந்திதானடா—அவர்
சாந்தி யடையவழி யேந்துவாயடா.
மாந்தரில் தெய்வமென வாழ்ந்தாரடா—அவர்
மண்ணியான் மொழியினுக்குப் பணிவாயடா.

2) மோகனப் புன்னகையும் போனதேயடா—அதில்
முகிழ்க்கும் கருணையருவி வரண்டதேயடா.
மௌனத்தைக் கத்தியாய் வாங்கினாரடா—நாட்டின்
மதப்பேரறைத் தீர்ப்பதற்கு மாண்டாரடா.

3) அரையில் முழத்துண்டைக் கண்டிலேமடா—அன்புரு
ஆளும் அருள்மொழிகள் கேட்டிலேமடா.
கரையாத காதலுக்குக் கரையேதடா—கண்ட
காவிய வாழ்வினுக்கு உரையேதடா.

4) வள்ளுவன் தெள்ளுதமிழ் வாழ்த்துவாயடா—ஆனால்
வாழ்வில் அதனைக்கடைப் பிடியாயடா.
எள்ளைத் திருக்குறளுக் கெம்மான்காணடா—எழில்
இலக்கிய மாகவாழ்ந்தார் எண்ணியோரடா.

5) காந்தியின் பாதையினில் காந்திகாணடா—அதில்
கடுகிநடந் தால்சாந்தி காணலாமடா.
பாந்தளும் நஞ்சொழிந்து பணியுமேயடா—அங்கே
படைதொடா வெற்றியுண்டு பார் பாரடா!

ந. சபாபதி,
2-ஆம் ஆண்டு.



## அன்னி மிஞிலி.

பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே பாரில் உயர்ந்து விளங்கியது நந்தமிழ்நாடு. அறிவு, வீரம், பண்பு முதலியவற்றால் உலகோர் உள்ளங்களைத் தன்பால் ஈர்த்தது. மொழியின் இனிமையால் என்றுங் குன்றாது எவரும் போற்றுமாறு இருந்து வருவது. தமிழ்த்தாய் தன்னரசோச்சித் தளிரியல் நங்கையெனத் தளர்நடையிட்ட காலம். எங்குந் தமிழ் முழக்கங்கேட்டு எழிலுடன் வாழ்ந்த காலம். பெருநில மன்னரும் குறுநில அரசரும் தமிழரசு நடாத்திய காலம். அருள் நிரம்பிய அறப்போர் நடைபெற்ற காலம். செங்கோன்மையுயர்வும் கொடுங்கோன்மையழிவும் கண்கூடாகக் காட்டிய காலம். நமது தமிழ்மொழி வரலாற்றில் இத்தகைய காலம் இருந்ததைத் தமிழ்நூல் கற்றோர் அறிவர். நீதியென்றும் வெல்லும். நீதியல்லன அழியும். அரசர்க்கு மட்டும் இது விலக்கன்று. இவ்வுண்மையை அறிவுறுத்தும் நூல்கள் பலவுள்ளன. அவற்றுள் உண்மையாய் நிகழ்ந்த நிகழ்ச்சியை-சங்ககால எல்லையில் நடைபெற்ற வரலாற்றை அறியவேண்டியது நமது கடமையாகும்.

தமிழக மக்களுள் ஆடவரேயன்றிப் பெண்டிரும் வீரம் மிக்கவர் என்று கூறுவது புதிதல்ல. பழந் தமிழ்நூல்கள் காட்டும் மகளிர் வீரச்செயல்களை போர்க்களத்தில் உன் மகன் புறங்கொடுத்து இறந்தான் என்று பகைவர் கூறக்கேட்ட தாய் அவன் புறங்கொடுத்துப் புண்பட்டு மாண்டிருப்பின் அவனைச் சிறுவயதிற் பாலூட்டி வளர்த்த என் மார்பை அறுத்தெறிவேன் என வீரவுரை கூறிக் களம் சென்று பிணக்குவியல்களில் தன் மகனுருவைத் தேடி, எடுத்துப் பார்த்து மார்பில் வெட்டுண்டு மரணம் எய்தினன் என அறிந்து, அவனைப் பெற்ற நாளினும் பெரிதுவந்தாள். முதல்நாட் போரில் தன் கொழுநன் இறக்க மறுநாள் போர் நடைபெறவிருந்தபொழுது தன் ஒரே புதல்வனை-பால்மணம் மாறாக் குழவியை அழகு செய்து போர்க்கருவி கொடுத்துக் களம் அனுப்பினாள் ஒரு வீரப்பெண். தன் மகனைக் களம் அனுப்பியபின் சிலர் சென்று உன் புதல்வன் எங்குற்றான் என வினவ அவன் யாண்டுச் சென்றானோ? அறியேன். அப்புலியிருந்த முழையிதோ! என்று கூறித் தன்வயிற்றைச் சுட்டிக் காட்டினாள் அவள். இத்தகைய வீரஞ்சால் பெண்டிர் நிறைந்திருந்தனர் அன்றைய தமிழகத்தில். வீரத்தோடு வேறுபல நிகழ்ச்சிகளிலும் மகளிர் மாறாத மனவுறுதி கொண்டிருந்தனர். கொடுங்கோல் மன்னரையழித்த மங்கையரும் இத்தமிழ்நாட்டில் வாழ்ந்தனர். கண்ணகி வீரத்தைச்சிலம்பின் ஒலியால் கேட்கின்றோம். மணிமேகலையின் மாறாத மன உறுதியை சாத்தனார் கூற அறிகின்றோம். இவற்றோடு சங்க நூலுள் ஒன்றான அகநானூறு தெரிவிக்கும் ஒரு செய்தியையும் காண்போம்.

பழங்காலத் தமிழகத்திலே ஓரிடம். பண்படுத்திய புன்செய் நிலம். எருவிற்காக வளர்த்த செழுங்கொடிகள். அவைகளை ஏரால் உழுது மடக்கி உழக்கி நிலத்தொடு கலக்கும் உழவர்களின் பெருமுயற்சி. அதன்பின் பயற்றின் விதை தூவிப் பண்போடு நீர்பாய்ச்சி ஏற்ற காலத்திற் களை களைந்து காத்து அவற்றை வளர்த்த உழவனின் உழைப்பு. உழைப்பின் பயனை அளிக்க வளர்ந்த கொடிகளின் செழுமை. செழிப்பின் மிகுதியை அறிவுறுத்தும் பச்சை நிறத் தோற்றம். பார்ப்போர் கண்கவரும் அதன் கவர்ச்சி. இந்நிலையில் உள்ள நிலத்தருகே பசித்துக் களைத்த பசுவொன்று வந்தது. பசியின் கொடுமையும் பயற்றின் செழுமையும் தன் விழைவை மேம்படச்செய்தது. விருப்புடன் சென்று கொடிகளைத் தின்றுகொண்டிருந்த பொழுதில் நிலத்திற்குரியோன் கண்டு கடுஞ்சினங் கொண்டு

ஆவினைப் பிடித்து அரசன்முன் சென்று தன் செழுமைப் பயற்றைச் சிதைத்த செயலைக்கூறி முறையிட்டான். கேட்ட காவலனும் ஆவுக் குரியோனை யழைத்து தக்க முறையில் ஒறுப்பதாகத் தெரிவித்தான். அவன் அளித்த ஒறுப்பு மிகக்கொடுமை வாய்ந்ததாம், என்னை ? காரா மேய்ந்த குற்றத்திற்காக அவன் கண்களையகற்றக் கட்டளை யிட்டான் காவலன். சிறிய குற்றத்திற்கு பெரிய ஒறுப்பு. மன்னன் ஆணையை நிறைவேற்றினர் வீரர்கள். கண்ணிழந்து வருந்தியோன் வீடு திரும்பினன். அங்கு அவன் ஒரே மகள்-அழகு நங்கை-அன்னி மிஞிலி-தன் தந்தை கண்ணிழந்த நிலையைக் கண்டு காரணம் தெரி ந்து பெரிதும் வருந்தினள். அரசன் முடிவு கொடுமை நிறைந்தது. தன்னாட்டு மன்னன் கொடுங்கோல் புரியும் கொற்றவன் என்றெண் ணினள். நாடாளும் மன்னன் கேடுசெய்யின் அவன்கீழ் வாழும் குடிகள் யாது செய்வர் ? எனக்கூறிப் புலம்பினள். நெறி தவறிய வேந்தன் நீடு வாழ்தல் கூடாது. பழியற்ற என் தந்தையைப் பரிதவிக் கச்செய்தவன் எந் நாட்டு மன்னனேயாயினும் அவனைப் பழிக்குப் பழிவாங்குவேன் என்ற உறுதி கொண்டாள். சூழ்நிலை மாற்றத்தால் மகளிர் மனம் மாறும் இயல்பினை மாநிலத்தில் அறிந்தார் யாவர் ? தன்மை மாறிய தளிரியல் நங்கை தன் எண்ணத்தை நிறைவேற்றக் கூறினள் வஞ்சினம். எனது அன்புத் தந்தையின் அழகுக் கண் களை யழித்த, கொடுங்கோல் மன்னன் ஒழிந்தாலன்றி நான் நல்லு ணவு உண்ணேன். புத்தாடை புனையேன். அழகு முதலியன செய் யேன் என்று கூறித், தன் எண்ணம் நிறைவேறும் வழியாதென ஆராய்ந்தாள்.

அம்மன்னனுக்கும் பிறிதோர் அரசனுக்கும் முன்பே கருத்து வேறுபாடு இருக்கும் போலும். தன் மன்னனை யழிக்கவேண்டு மாயின் வேறொரு வேந்தன் துணையை நாடவேண்டும் என்று நினைத் தாள். நினைத்தவாறே அம்மன்னனிடம் சென்று தன் குறையினை யும் தன் நாட்டு மன்னன் கொடுங்கோல் நிலையினையும் கூறித் தனது கருத்தையும் தெரிவித்துத் துணைபுரிய வேண்டினள். செய்தியறிந்த மன்னன் ஆராய்ந்து, குடியோம்பும் கொற்றவன் மடியின்றி முறை செய்வதே நன்று. அவ்வாறன்றி ஆராயாது முடிவுசெய்து தீராப் பழி செய்துதன் நலமன்றிச் செல்லும் வேந்தர்க்கழகன்று. குடி களை யலைக்கும் மன்னன் நெடுநாட்கள் ஆட்சி செய்தல் கூடாது. அவன் அழிவதே நன்று. கொடியாரைப் பிறர் அழித்தல் கனி [illegible]

யினைக் களைந்ததோடொக்கும் என்றெண்ணி, மங்கை வேண்டுகோளை ஏற்று, அம்மன்னனைப் போருக்கழைத்தான். அவ்வாறே போர் நடைபெற்றது. வீரஞ்சால் மறவர்களும், அடுபோர்க் களிறுகளும் கடுநடைப் புரவிகளும் அழகுடைத்தேர்களும் தம்மிற் கலந்து பொருது அழிந்தன. போரின் முடிவில் நங்கைக்குத் துணைபுரிந்த நல்லோன் வென்றான். கண்களைந்த காவலன் அழிந்தான். இந்நிலையை யறிந்த அன்னி மிஞிலி பெரு மகிழ்வு கொண்டாள். மண்ணுண்ட மன்னன் மாநிலத்தில் விழுந்துகிடக்கும் நிலையினைக் கண்டாள். கூறிய வஞ்சினம் நிறைவேறியது குறித்து அவள் உள்ளம் மகிழ்ந்தது. நலிவுற்ற முகம் பொலிவும், தளர்ச்சியடைந்த அவள் உடல் வளர்ச்சியும் எய்தியது. புத்தாடையணிந்து பொன்னிறப் பாவையென்ன விளங்கினாள். பைந்தமிழ்ப் பாவை செங்கோன்மை வாழ, கொடுங்கோன்மை யழியக் கூறிய உறுதியுரை இறுதியில் வென்றது.

இது கற்பனைக் கதையன்று. உண்மை வரலாற்றை முன்னிலையாக வைத்துச் சிறிது கற்பனையுரைகள் கூடியதேயாம். தொகை நூல்களில் ஒன்றாகிய அகப்பொருட் பேழையாம் அகநானூற்றில் உள்ள அரும் பெறல் அணிகள் பலவற்றுள் இரண்டின் (196, 262) விளக்கமே இவ்வரலாற்றிற்குத் துணைபுரிவன. தமிழ்ப்புலவர் பலருள் வரலாறு தெரிவிக்கும் புலவர் சிலரே. அவருள்ளுஞ்சிறந்தார் பரணர். அவர் தெரிவிக்கும் செய்தியே ஈண்டுக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவண் வந்த அன்னிமிஞிலி என்னும் பெயர் பெற்ற அணங்கே நாம் எடுத்துக்கொண்ட செய்திக் கேற்ற வீரப்பெண். கண்ணிழந்தோன் இவள் தந்தை. கண்களைந்த காவலன் கோசர் இறைவன். பெயர் தெரியவில்லை. துணைவந்த வேந்தன் திதியன். போர்நடைபெற்றவிடம் அழுந்தை என்னும் ஊர். இவ்வரலாறு தெரிவிக்கும் பாக்களால் அறியப்படும் செய்திகளின் குறிப்பு இவையே.

எனவே, ஐந்திணை ஒழுக்கம் கூறும் முறையில் அழகான காட்சிகளோடு உண்மை வரலாறுகளையும் உரைத்துச் செல்லும் புலவர்களின் ஆற்றல் போற்றத்தக்கது. அம்முறையில் வரலாற்றறிஞர் பரணர் பாடிய பாக்களின் சுவையினையும் அவர் அறிவுத்திறமையையும் அறிந்து மகிழ்ந்து போற்றுதல் கற்றோர் கடமையாகும்.

ச. முத்துக்குமாரசாமி,
வித்துவான் இறுதிநிலை.

# காவிரி சொல்லும் கதை.

அன்று, நான் ஒரு கன்னிப்பெண். ஏட்டிலே தீட்டமுடியாத எழிலுருவம். வண்டு நுகராத மலர். கண்டோரைக் கையாலழைக்காது நாற்றத்தால் அழைக்கும் நறுமலர். சூடாத பூ. வாடாத மல்லிகை ஆம், அப்படித்தானிருந்தேன் அன்று. நான், எங்கே, எப்பொழுது, யாருக்குப் பிறந்தேன் என்பது எனக்கே தெரியாது. ஆதரவற்றவளாகத்தான் அன்று பிறந்தேன். அணைத்துக்கொண்டார்கள் சிலர். உடன்பிறந்தார் ஒருவருமில்லை எனினும் பக்குவமாக வளர்த்தனர் பலர். என் பிறப்பைப்பற்றிப் பலர் பல வாறுகக் கூறுகிறார்கள். ஒரு காலத்தில் "அகத்தியனார் மேரு மலையிலேயிருந்து தவஞ் செய்துகொண்டிருந்தார். அவர் கமண்டலத்தில் வைத்திருந்த நீரை ஒரு காக்கைத் தன்னலகால் கவிழ்த்துவிட்டது. அதனின்றும் இழிந்தவளே யான். அதனால் "காகவிரி" என்று பெயரிட்டனர் என்பர் சிலர். கவேரன் என்னும் காவலன், அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டை அடைய அவாவி, பரமசிவனை நோக்கி, பன்னெடுங்கால் தவஞ்செய்து என்னைப் பெற்றுத் தரையிலே தவழவிட்டான். தசரதன் மகனுக்குத் தாசரதி என்று பெயராயவாறுபோல கவேரனால் ஆக்கப்பட்ட எனக்குக் "காவேரி" என்றும் பெயர் உண்டாகியது என்பர் பலர். இஃது எவ்வளவு உண்மையென்பது எனக்குத் தெரியாது. எது எவ்வாருயினும் என் இரு மருங்கிலும் காக்கள் (சோலைகள்)விரிந்து பரந்து கிடத்தலால் எனக்குக் "காவிரி" என்று பெயர் சூட்டப்பட்டது என்பது மட்டும் உண்மை.

நான் பிறந்தது குடகு நாட்டில்; குந்தியிருந்து குதித்துத் தவழ்ந்தது மைசூர் நாட்டில்; தளர்நடை போட்டுத் தவழ்ந்தது கொங்குநாட்டில். மலையிலே பிறந்தேன் மாண்புடன், வளர்ந்து பக்குவமானேன். எனது பக்குவமடைந்த இளமை எதற்கும் அஞ்சாத வீரமுடைத்தாக இலங்கியது. மலையிலே ஏறினேன், மடுவிலே குதித்தேன், காட்டிலே சுற்றினேன், நாட்டிலே பாய்ந்தேன். புகாத இடமெல்லாம் புகுந்து சுற்றினேன். என்னைக் கண்டு அஞ்சியவர் சிலர். அணைக்க முயன்றனர் பலர். கண்ணைக் காட்டினர் சிலர். காதலைக் கேட்டனர் பலர். பண்ணிசைத்தனர்

பலர். பாடலியற்றினர் சிலர். இவ்வளவிற்கும் எனது எழிலுருவமே காரணம். "தாழிருங்கூந்தல் காவிரி" என்று பரணர் பாடுகின்றார் என்றால் மற்றவற்றைக் கேட்பானேன்? எனது இன்பச் செலவைக் குணதிசை நோக்கி நடத்தினேன். குடகு நாட்டிலும் மைசூர் நாட்டிலும் அருவியாகக் குதித்தும், ஆறாய் ஓடியும், ஆடியும் பாடியும், அழகு கனிந்த பருவ மங்கையாய்த் திரிந்தேன். குடகு நாடு என் அழகை அள்ளிப் பருகுவதிலேயே அமைதி கொள்ளுகிறது. மைசூர் மக்களும் என்னால் அடையும் பயன் மிகச் சிறிதாகும். எத்தனை நாட்களுக்குத்தான் என் விருப்பப்படித் திரியமுடியும்? என் அடங்காத்தன்மையைக் கண்டு அடக்குவதற்கென்று அவனியில் ஒருத்தன் தோன்றாமலா இருப்பான்? வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலுண்டல்லவா? ஆம் அப்படித்தான் தோன்றினான். சோழர் குடியிலே ஒரு தோன்றல். அவன் மன்னன், நான் மங்கை. அவனிடம் படையுண்டு. என்னிடம் என்ன படையா இருக்கிறது? நான் சாதாரண பெண்தானே. கண்டான் காவலன். அழைத்தான். நானும் அவன் அணைப்பிலே சின்னாட்டுயின்றேன். இருப்பினும், என் குறிக்கோள் பாதை. இன்பக்கனவு, தியாகச் சபதம் நிறைவேறாமற்போனது கண்டு விழித்தேன். எனது இன்பபுரிச் செலவினை எடுத்துக் கூறினேன் என்னருமைக் கரிகாலனிடம். மறுத்துவிட்டான் மன்னவன். மங்கையர்கள் மட்டுமென்ன? எண்ணியவற்றை எண்ணியபடியே திண்ணியதாகச் செய்து முடிப்பவர் பெண்மணிகளன்றோ? அன்புக் கரிகாலனிடம் கூறிவிட்டு என் இன்பச் செலவை மேற்கொண்டேன். என் அடங்காத்தன்மையைக் கண்ட அரசன் என் விருப்பப்படி எங்கும் செல்லவொட்டாது தடுத்து நிறுத்தி இலங்கையிலிருந்து கொண்டு வந்த 1200 கைதிகளைக்கொண்டு எனக்குக் கரை கட்டுவித்தான். யானும் அவன் ஆணைகடவாது அடங்கிச் செல்வேனாயினேன்.

எனது வற்றாத வளமையைக்கண்டு சென்னை அரசியலார் நாட்டிற்குப் பல வகையிலும் பயன் தருமென்றெண்ணி 1934-ஆம் ஆண்டு மேட்டூர் என்ற இடத்திலே ஒரு அணையைக் கட்டினார்கள். அங்குள்ள மக்கள் அனைவருக்கும் என்னாலியன்ற உதவியைச்செய்து கொண்டு வருகிறேன். அங்கிருந்து கிழக்கு நோக்கிச் செல்லும் என்னை 1600 ஆண்டுகட்குமுன் சோழனொருவன் கல்லணை கட்டித் தடுத்து சோழநாட்டைச் சுற்றித்திரியும்படி அனுப்புகின்றனன். அங்கிருந்து எனது அன்புக்கைகளை வீசி நடக்கலுற்றேன்.

மலையிலே தோன்றி இடையிலே மறுக்கப்பட்டு எனது ஆருயிர்க் காதலர், அருமை அன்பர், அவர்தான் எனது கணவர் கடலோடு கலந்து வாழ்கிறேன். எனது கணவரோடு கலக்குமிடத்திற்கு 'புகார்' என்று பெயரிட்டனர் மக்கள். வெறும் புகார் அல்ல பூம்புகார். கரிகாலன் ஆட்சி செய்ததும் இங்கேதான். கற்புக்கரசி கண்ணகி தோன்றியதுமிப்புகாரிலேதான். நான் புகுந்த இடத்திலிருந்து புறப்பட்டு நான் பிறந்த இடத்தில் விண்ணை யடைந்தாள் கண்ணகி.

நான் பிறந்தது மலையிலே. புகுந்தது கடலிலே. உயர்ந்த இடத்தில் பிறந்தேன், தாழ்ந்த இடத்திற் புகுந்தேன். உயர்வதும் தாழ்வதும் உலகத்து இயற்கைதானே. மலையிலே மாணிக்கம் பிறக்கிறது, மக்கள் தாமே சூடுவர். ஆழ்கடலிற் முத்து பிறக்கிறது, அதை அரசன்தானே அணிகின்றான். தமிழ்க் காதலல்லவா? எனக்குக் குடகு தாய்நாடு, சோணாடு சொந்தவீடு. பெண்கள் தாய் வீட்டில் மிடுக்குடனே வாழ்வார்கள். தாய் தந்தையர்களும் அழகு படுத்தி அகம் மகிழ்வர். ஆனால், தான் புகுந்த வீட்டில் அரும்பாடு பட்டேனும் தன்னருமைக் குழந்தைகளைக் காக்கும் பொறுப்பு அவளைச் சார்ந்ததாகும். எனது தென்னாடாகிய அருமை மக்கள் மேலுள்ள அன்பால் உடல் மெலிய பற்பல துறைகளிலும் வருந்தி உழைத்து என் அன்புக்குழந்தைகளைச் சீராட்டிப் பாராட்டி அவர்கள் இன்முகம் கண்டு மகிழ்வதே எனக்குப் பேரின்பம். நான் வரும் பொழுது எனது வழித்துணையாகிய அமராவதி, கேமாவதி, பவானி போன்ற தோழியர்கள் கொடுத்த பல வளங்களையும் கொண்டு எனது மக்களைக் காத்து வருகிறேன். எனது பருவம் வளர்ந்தாலும் நான் முதுமை அடையவில்லை. எனது சோணாட்டு மக்கள் இன்புற வாழ்வதைக்கண்ட சீத்தலைச் சாத்தனார் "பாடல் சிறப்பின் பரதத்து ஓங்கிய கோடாச் செங்கோல் சோழர் தம் குலக்கொடி" என்று என்னைச் சோழநாட்டிற்கே உரிமையாக்கி விட்டார். இளங்கோவடிகளும் "சோழர்தம் தெய்வக்காவிரி" என்றும் கூறியிருக்கிறார். எனது வற்றாத வளமையைக்கண்ட கடியலூர் உருத்திரங்கண்ணனார் "வான் பொய்ப்பினும் தான் பொய்யா மலைத்தலைய கடற்காவிரி" என்று பாராட்டினார். சாத்தனாரும் 'கோள்நிலை திரிந்து கோடை நீடினும் தான்நிலை திரியாத்தண்டமிழ்பாவை" என்று இயம்பினார்.

மேலும் எனது வளமையைப் பாராட்ட வந்த பொருநராற்றுப்படை "வேலியாயிரம் விளையும்" என்று கூறுகிறது. எனது

பக்கத்தில் என்றும் மக்கள் ஆரவாரித்துக்கொண்டே இருப்பார்கள். மகளிரும் ஆடவரும் புதுப்புனலாடிப் பொங்கும் இன்ப வெள்ளத்தில் திளைப்பர். இதை ஆசிரியர் இளங்கோவடிகள் "உழவர் ஓதை மத கோதை, உடைநீர் ஓதை தண் பதங்கொள் விழவர் ஓதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி" என்று பாராட்டுகிறார். நான் சோழநாட்டைப் புரக்கின்றதைக்கண்ட அடிகள் "வாழி யவன்றன் வளநாடு மகவாய் வளர்க்கும் தாயாகி ஊழியுய்க்கும் பேருதவி ஒழியாய் வாழி காவேரி" என்று பாடுகிறார். இவ்வனைத்தையும் கண்ணுற்று யான் இரும்பூது எய்துகின்றேன். இத்தனை வளத்தினையும் பாராட்டித்தான் எனக்குப் பொன்னி என்ற சிறப்புப்பெயரும் வழங்கிவருகிறார்கள். நான் இல்லையேல் தென்னாடே பாழ்பட்டுப் பாலையாக மாறும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. வானளாவக் கோபுரங்கட்டித் தானெண்ணிய செயல் முடித்தானே இராசராசன் என்னுடைய வளமையாலன்றோ! என்னை ஏற்ற அளவிலே தெரிந்து பயன்படுத்திக் கொண்டால் மக்கள் நல்ல நிலைமையடைவார்கள் என்பது மட்டும் உறுதி.

என்னைச்சுற்றி, சோலைகளும் சாலைகளும், நாடுகளும், காடுகளும், படப்பைகளும், பட்டினங்களும் இருந்துகொண்டே இருக்கின்றன. எனது அறவணைப்பிலேதான் தென் கைலாயம் என்னும் திருவையாறு இருக்கிறது. என் மருங்கிலேதான் தஞ்சை மன்னன் சரபோசி கட்டிய கல்யாணமகால் வானுற ஓங்கி நிற்கிறது. அதிலேதான் அரசர் கல்லூரி இருக்கிறது. தனித்தமிழ் மணங் கமழ்வது அங்கேதான். தமிழ் நாட்டை உருவாக்குவதற்கு அங்கிருந்துதான் புலவர்களை ஆட்டாண்டு தோறும் அனுப்பிக்கொண்டிருந்தேன், இருக்கிறேன், இருப்பேன். தினமும் அந்த நறுந்தமிழ் நாற்றத்தை நுய்த்தவாறுதான் செல்லுகிறேன். தமிழ் மணங்கமழ்ந்து திக்கெட்டும் முரசு கொட்டட்டும் என்று வாயார வாழ்த்துகிறேன். நீண்ட நேரம் பேசிக்கொண்டே இருந்துவிட்டோம் தோழி! எனது கணவர் என்னைக்காணாது கவலையுற்றிருப்பார். அதிக நேரமாகி விட்டது. மீண்டும் ஒரு நாள் ஓய்வு கிடைக்கும்போது பேசுவோம். போய் வருகிறேன்! தோழி!

**சி. கோபாலன்**
வித்துவான் 4-ம் ஆண்டு.

---

# கலிங்கங் கொண்ட குலோத்துங்கன்.



காட்சி 1.

இடம்:- [சயங்கொண்டசோழபுரம்] அரண்மனை.

உறுப்பினர்:- சோழர் குலோத்துங்கர், அமைச்சர் முதலானோர்.

காலம்:- மாலைப் போது.

அமைச்சர்:- புகழ்சால் வேந்தே! புலவர் பெருமக்களே! வணக்கம். நம் மன்னர் இன்று அரியணை ஏறியதின் அறிகுறியாக மகிழ்ச்சிக் கடலில் மூழ்குகின்றோம். இன்று முதல் நாடு நலமுறும். இருளைப் போக்கும் ஞாயிறுபோல் மக்களின் துயர்நீக்கி அவர்களை மகிழ்விப்பார். இன்பம் விளைய, நாடு செழிக்க, கலை வளர ஆவன செய்வாராக! சோழர் குலத் தோன்றல் குலோத்துங்கர் வாழ்க!

அரசர்:- புலவர்களே! அமைச்சர்களே! பெருமக்களே! இன்று நான் வெற்றிகொண்டு அரியணை அமர்ந்ததைப் பற்றிப் பலர் பலவாறும் இறுதியில் அமைச்சரும் புகழ்ந்தார்கள். அவர்களுக்கு எனது மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அறம் வளர, அறியாமை அகல, தமிழ்மொழி தழைக்க நாடு செழிக்க, ஆவன செய்வேனென உறுதி கூறுகிறேன். இன்று முதல் புலவர்குழாம் அவ்வப்போது கூடும்.

மற்றோர் அமைச்சர்:- மக்களே! நாட்டைப் புரக்க வந்த நம் வேந்தர் வாழ நாம் கடவுளை இறைஞ்சுவோம். அவருக்கு நாம் உதவிபுரிவோமாக! இடியேறு போன்ற நம் கருணாகரரை நாட்டைக் காக்கும் படைத்தலைவராக அரசர் அமர்த்தியுள்ளதைக் கேட்டு மனமுவக்கின்றேன்.

கருணாகரர்:- மக்களே! நாடு வெளியாரின் பயத்தை நீக்கி வாழ நான் தானைத் தலைவனாக இருந்து பணியாற்றுமாறு பணித்ததற்கு மகிழ்கின்றேன். வாழ்க மன்னர் குலோத்துங்கர்!

அரசர்:- அமைச்சரே! இன்று இங்குக் கூடியிருக்கும் மக்கள் மகிழ பாணர்களைக் கொண்டு இன்னிசையரங்கும் நாட்டியப் பெண்களைக் கொண்டு நாட்டிய அரங்கும் நடக்க ஏற்பாடு செய்யுங்கள்,

அமைச்சர்:- அப்படியே செய்கிறேன் அரசே.

காட்சி 2.

இடம்:- அரண்மனை.
உறுப்பினர்:- அரசர், அமைச்சர், கருணாகரர்.
காலம்:- மாலைப் போது.

அரசர்:- அமைச்சரே! இன்று, நாடு அமைதியுடன் இருக்கின்றது. கலை வளர்ச்சி பெருகுகின்றது. புலவர் குழாமும் கூடி மொழியின் வளர்ச்சி கருதி ஆராய்கின்றது. அண்டை நாடுகளான பாண்டியர், சேரர், கங்கர், பல்லவர் அனைவரும் நமக்கு அடங்கிச் சிற்றரசர்களாகிவிட்டனர். ஆகையால் நாம் காவிரிக்கரை மருங்கில் வேட்டையாடித் தில்லைப்பெருமானை வணங்கி, பின் பாலாற்றங்கரையில் பரிவேட்டையாடச் செல்லுவோம். அங்கு வேட்டையாடிப் பின் பல கலைகளும் பாங்குற விளங்கும் கச்சி மாநகரில் சென்று தங்குவோம். இவ்வாண்டு திறையளக்கும் அரசர்கள் ஆங்கு வந்து திறைப்பொருளைக் கொடுக்கட்டும். எல்லா அரசர்களுக்கும் ஓலை அனுப்பிவிடுங்கள். ஆங்குச் சில காலம் தங்கி, பின் இங்குத் திரும்பி வருவோம். செலவிற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் செய்யுங்கள். படைகளும் புறப்படட்டும்.

அமைச்சர்:- சீக்கிரம் செய்கிறேன் அரசே.

அரசர்:- கருணாகரரே! தங்கள்......

கருணாகரர்:- நாளையே புறப்படுவோம் அரசரே! படைகளும் சண்டையின்றி தினவுகொண்டு இருக்கின்றன. நம்மோடு வேட்டையாடி வரட்டும். உடனே பிற ஏற்பாடுகளையும் செய்கிறேன்.

காட்சி 3.

இடம்:- கச்சி நகரில் அரண்மனை.
உறுப்பினர்:- அரசர், கருணாகரர், மற்ற அமைச்சர் முதலானோர்.
காலம்:- காலை

அரசர்:- அமைச்சரே! பாலாற்றங்கரை வேட்டையும் வந்த களைப்பும் இந்த இரண்டு நாட்களில் தீர்ந்தன. இன்று பாணர்களைக் கொண்டு இசையரங்கிற்கு ஏற்பாடு செய்யுங்கள்.

அமைச்சர்:- எல்லாம் தயாராக இருக்கின்றன அரசே! உடனே தொடங்கவேண்டியதுதான். (இசையரங்கு நடந்துகொண்டிருக்கின்றது. வாயிற் காவலன் வருகிறான்).

வாயிற்காவலன்:- அரசே! பல நாட்டு வேந்தர்களும் திறைப் பொருளை யளக்க வாயிற்புறத்தே வந்துள்ளனர்.

அரசர்:- எல்லோரையும் வர விடுக.

வாயிற்காவலன்:- அப்படியே செய்கின்றேன் வெற்றிவேற் கொற்றவரே!

[பல நாட்டரசரும் வந்து திறைப்பொருள் கொடுத்து வணங்கி விடைபெற்றுச் செல்கின்றனர்]

அரசர்:- திருமந்திர வோலையாளரே! திறைகொடா அரசர் யாரேனும் உளரோ?

திருமந்திரவோலையாள்:- வெற்றி வேந்தே! எல்லா அரசர்களும் தத்தம் திறைப்பொருள்களைச் செலுத்தினர். ஆனால் கலிங்கக் காவலன் அனந்தபத்மன் என்பவர் மட்டும் தந்திறைப்பொருளை செலுத்தவில்லை.

அரசர்:- என்ன! கலிங்க நாட்டானா? மறுமுறையும் திமிர் தலைக்கேறிவிட்டதோ? நமது ஆற்றலை நேரில் காண விழைகிறான் போலும்! இப்போதே சென்று அடக்கிவரவேண்டும். தானைத் தலைவரே! படைகளைத் தயார் செய்யும்.

கருணாகரர்:- வெண்குடை வேந்தே! இத்தொழிலை நானே செய்து முடிப்பேன். நான் சென்று சோழர் வீரத்தைக் கலிங்கருக்குக் காட்டி வருகிறேன்.

அமைச்சர்:- ஆம், அரசே! கருணாகரரே ஒருவரே போது

அரசர்:- சரி. அப்படியே ஆகட்டும்.

## காட்சி 4

இடம்:- போர்களத்துப் பாசறை.
உறுப்பினர்:- கருணாகரர், படை வீரர்கள்.
காலம்:- காலை.

கருணாகரன்:- வீரத்தோழர்களே! நமது நெடுமுடி நேரியருக்குத் திரையளக்க வராத இந்த கலிங்க அரசனை வென்று அவனையும்

கொண்டு செல்லவேண்டும். சக்கரக் கோட்டத்தான் கங்கர் காவலன் பாண்டியன் போலவும் கலிங்க வேந்தனும் உங்கள் வீரத்தை உணரவேண்டும். வெற்றிப் புலவர்களே! புறப் படுங்கள்! காலனுக்கும் கலங்காவீரர்களே! கலிங்கத்தைக் கொள்ளையிட்டு விலையுயர் பொருள்களை நம்மன்னன் வீரக்கழ லின்கீழ் வைத்து வணங்கவேண்டும். உம், செல்லுங்கள், ஊர் மக்கள் அரசனிடம் ஓலமிட அவன் அலறியடித்துக் கொண்டு ஓடிவரவேண்டும்!

படைவீரர்கள்:- வாழ்க நம் வேந்தர்! வாழ்க கருணாகரர்! வெற்றி நமதே!

காட்சி 5

இடம்:- **கலிங்க நாட்டு அரண்மனை.**
உறுப்பினர்:- **அனந்தபத்மன், எங்கராயன், மக்கள் முதலானோர்**
காலம்:- **நண்பகல்.**

மக்களில் ஒருவன்:- அரசே! அபயம், அபயம்! நாடு கொள்ளை போகிறது!

அனந்தபத்மன்:- என்ன! இது என்ன கோலம்? நீங்களெல் லாம் ஏன் இப்படி ஓடிவருகிறீர்கள்? என்ன நடந்தது? சொல்லுங்கள் சீக்கிரம்.

ஒருவன்:- எங்கள் பொருள்களெல்லாம் பறிபோகின்றன! வீடுக ளெல்லாம் பாழாகின்றன! இதையெல்லாம் தமிழ் வேந்தருள் ஒருவரான சோழ மன்னர் குலோத்துங்கர் படை செய்கின்றது! கொடுமை, கொடுமை! எங்களால் பொறுக்க முடியவில்லை.

அனந்தபத்மன்:- ஆ! குலோத்துங்கன் படையா? எனது மறத் தன்மையை அறியான் போலும்! இதோ அழித்து விடுகிறேன் அவனது படைகளை.

எங்கராயன்:- மன்னரே! தங்களுக்கு எதிர்மொழி கொடுக்கிறே னென்பதற்கு மன்னிக்கவும். சோழ அரசனுக்கு நாம் திறை கொடாததின் விளைவு இது. அவ்வரசன் பல நாடுகளையும் வென்று வெற்றிக்கொடி நாட்டியவன். நாட்டைப் பகைவரிட மிருந்து பாதுகாத்து மக்களை மகிழ்விக்கின்றான். ஆகையால்

மக்கள் அவனிடம் அன்புடையவர்களாக இருக்கின்றார்கள். சேரர், பாண்டியர், கங்கர், பல்லவர், சக்கரக்கோட்டத்தரசர் முதலானோரும் அவனுக்குத் திறை கொடுக்கிறார்கள். ஆகையால் நாம் படையெடுத்தல் தகாது. சோழ வீரர்களின் வீரத்தைக் கணிக்க முற்படுவது ... ...

அனந்தபத்மன்:- அமைச்சரே! நீர் என் திறமையறியாமல் இவ்வாறு கூறுகிறீர்! சிங்கத்தை சிறுநரி வெல்லுமோ? எனது ஆற்றலுக்கு எதிர்மொழி கூற வாரோரும் அஞ்சுவர்! இனியும் இவ்வாறு கூறுவதை ஒழிப்பீராக. தானைத் தலைவரே! இன்றே படையைத் திரட்டுங்கள், தமிழர்களின் கொட்டத்தை அடக்குகின்றேன்.

## காட்சி 6.

இடம்:- கச்சி நகரில் அரண்மனை.

உறுப்பினர்:- குலோத்துங்கர், அமைச்சர், கருணாகரர், படைவீரர்கள்.

காலம்:- மாலை.

கருணாகரர்:- (வந்து கொண்டே) அரசே! நமக்கே வெற்றி! புலியிடம், மான் வீரம் பேசிய தொப்ப, திறையளக்க மறுத்த அனந்தபத்மனை வென்று அவனது நாட்டுப் பொருள்களைக் கவர்ந்து வந்துள்ளேன். இதோ பாருங்கள். [அவனுக்குப் பின் வீரர்கள் கொண்டுவரும் பொருள்களைக் காட்டுகிறான். மணியும் பொன்னும் பலவும் காட்சியளிக்கின்றன.]

அரசர்:- கருணாகரரே! மிக்க மகிழ்ச்சி. ஆங்கு நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறுவீர்.

கருணாகரர்:- கூறுகிறேன் கொற்றவா!

ஒரு வீரன்:- நான் கூறுகிறேன் காவலரே! நால்வகைப் படைகளையும் கொண்டு கலிங்கத்தினுள் நுழைந்தோம். கலிங்க ஊர்களைக் கொள்ளையிட்டோம். ஆனால் உயிர்களைக் கொல்லவில்லை. மக்களுடைய விலையுயர்ந்த ஆடைகளையும் பொருள்களையும் கவர்ந்து கொண்டு ஊர்களைத் தீக்கிரையாக்கினோம். கலிங்கர்கள் அரசனிடம் ஓடி ஓலமிட்டார்கள். அனந்தபத்மன்

வெகுண்டெழுந்து பெரும் படையொடு வந்து பொருதான். நம் கருணாகரர் முகிலைக்கிழித்தோடும் நிலவெனக், கலிங்கர் படையினூடே ஓடிப் பெருஞ்சமர் புரிந்தார். அனந்தபத்மன் ஓடி ஒளிந்தான். எஞ்சிய அவனது வீரர்கள் புறங்கொடுத்து ஓடினர். புலிக்கொடியின் ஆற்றல் உணரா அற்பர்களான கலிங்க வீரர்களுள் சிலர் மாற்றுருவங்கொண்டு உயிர் தப்பினர். ஓடியவர்களும் தங்கள் நிழலைப் பார்த்து பகைவரோ என்று அஞ்சி நடுங்கினார்கள்! கருணாகரர் கலிங்க மெரித்த நாள் கலிங்கருடுத்தியது ஒரு கலிங்கமே! குருதி படிந்த கொடிகளை இடுப்பிலணிந்து மொட்டையடித்து 'நாங்கள் புத்த மதத்தினர்' எனப் பகர்ந்து பணிந்தனர் சிலர். இனி கலிங்கர்கள் நம் பக்கம் தலை காட்டவும் மாட்டார்கள்.

அரசர்:- உங்கள் வீரச்செயல்களைக் கண்டு பெருவுவப்படைகிறேன். கருணாகரரே, புகழுடம்பெய்திய வீரர்களின் உறவினர்களுக்கு இறையிலி நிலங்களும் வாகை சூடிய படைஞர்களுக்கு பரிசுகளும் விருதுகளும் கொடுப்பீராக. [அமைச்சரை நோக்கி] அமைச்சரே! நாளை நாம் வெற்றிவிழா கொண்டாட ஏற்பாடு செய்வீராக.

அமைச்சர்:- அவ்வாறே செய்கிறேன் அரசே!

## காட்சி 7.

இடம்:- அரண்மனை.
உறுப்பினர்:- அரசன், சயங்கொண்டார், புலவர்கள்.
காலம்:- மாலை.

சயங்கொண்டார்:- சோழர் குலக் கொழுந்தே! புலவர்களே! வணக்கம். பல நாட்டரசர்களோடு போரிட்டு வென்று திறையளக்கும்படிச் செய்த நம் மன்னர், திறை கொடா கலிங்கவேந்தன் அனந்தபத்மனை வென்று வாகை சூடியுள்ளார். நம் மறவரின் வீரத்தை யுலகுக்குக் காட்டிவிட்டார்! ஒரு நாள் நானும் அரசரும் அளவளாவிக் கொண்டிருக்கும்போது கலிங்கப்போரைப் பற்றிப் பேச்சு எழுந்தது. புரவலர், 'சயங்கொண்டாரே! தங்களைப் போன்று, பகைவர்களை வென்றமையால் நானும் சயங்கொண்டானானேன்' என்றார். உடனே நான் 'சயங்கொண்டானைச் சயங்கொண்டான் பாடுவது மிகவும்

பொருந்தும்' எனப் பகர்ந்து அன்றே பாடத்தொடங்கி விரைவில் இப்பரணியைப் பாடி முடித்தேன். இந்நூலினால் அவரது வீரமும் கொடையும் கலையார்வமும் மொழியுணர்ச்சியும் நாட்டைப் புரக்கும் நற்பண்பும் தமிழ் நாடுள்ளளவும் நிற்கும். இந்நூலை இக்குழாத்தில் அரங்கேற்ற உங்கள் அனுமதியை வேண்டுகிறேன்.

ஒரு புலவர்:- பொன்னியின் செல்வரே! புலவர்களே! வணக்கம். புலவர் சயங்கொண்டார், வேந்தர் சயங்கொண்டாரைப் பாடியிருக்கிறார். போரில் ஆயிரம் களிறுகளை வென்று வாகை சூடிய வீரனைப் பாடும் பரணியாகக் கொண்டு, நம் அரசரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு 'கலிங்கத்துப் பரணி' யெனும் இந்நூலைப் பாடியுள்ளார். இந்நூலில் ஆங்காங்கு கழற்கால் வீரரான மன்னரின் வீரத்தையும் மக்களைப் பேணும் பண்பையும் கலைவளர்ச்சியில் ஆர்வத்தையும் விதந்து போற்றியிருக்கிறார். இம்மாதிரி நூல் தமிழ் நாட்டிற்குத் தேவையாயிருந்தது. அதைப் பூர்த்திசெய்த புலவர் பெருமானுக்கு நமது நன்றியைத் தெரிவிப்போம். தமிழர்களின் மாண்புமிக்க மறத்தன்மையை உலகறியக் கூறிய முறைமை நம் சயங்கொண்டாரையே சாரும்! சோழர்களின் வரலாற்றையும் பேய்க்கூற்றாகக் கூறியிருப்பது படிக்கப் படிக்க தெவிட்டா இன்பம் கொடுக்கிறது! தெவிட்டாத தீந்தமிழில் எளியநடையில் ஐந்நூற்றுத் தொண்ணூற்றாறு தாழிசைகளில் கூறியுள்ளார். இந்நூல் தமிழர் உள்ளமென்ற ஒவ்வொரு பாசறையிலும் சென்று தங்கவேண்டும். அரிய ஒரு நூலைக் கொடுத்துத் தமிழகத்தை மேன்மைப் படுத்தித் தானும் பெருமை கொண்ட சயங்கொண்டார் வாழ்க! வாழ்க 'கலிங்கத்துப் பரணி'! வாழ்க பாட்டுடைத் தலைவர் 'சயங்கொண்டார்'!

அரசர்:- பேரறிவு பெற்ற புலவர்களே! பரணியைப் பாடி புகழ் பெற்ற சயங்கொண்டாரை எனது மனங்கொண்டு பாராட்டுகிறேன். தமிழை வளர்த்த புலவர் சயங்கொண்டாருக்கு நிறைந்த பரிசில் கொடுப்பதோடு 'கவிச்சக்கரவர்த்தி' யெனப் பட்டமும் கொடுக்கிறேன். [பட்டமளித்தல்—அவை கலைகிறது]

**த. கோடப்பிள்ளை,**
வித்துவான் முதலாண்டு.

———

# பொலிக பொங்கல் !



மலர்புனை மங்கையர் மாண்புடன் மகிழ்ந்து
இலகொளி பரப்பும் எழில்விளக் கேற்றி
சங்கின் இன்னொலி பொங்கி முழங்க
மங்கலப் பொங்கல் மனைதொறும் பொங்கி
கன்னலுஞ் செந்நெலுங் களிப்புடன் சேர்த்து
மன்னுயிர் போற்றி மாத்தமிழ் மொழியில்
மங்கல வாழ்த்து மனங்கனிந் திசைக்கும்
பொங்கற் புதுநாள் ! புத்தொளிப் பொன்னாள் !
செந்தமிழ் நாட்டார் செல்வப் பெருநாள் !
செங்கதிர்ச் செல்வன் தென்றிசைச் செலவை
வடபால் விடுக்கும் வளமுறு திருநாள் !
உழவர் பெருநாள் தமிழர் திருநாள் !
ஏறுகள் தழுவும் இன்புறு மொருநாள் !
ஒப்பில் புலவன் உயர்தமிழ்ப் பாவலன்
செப்பிய முப்பால் சிறக்கப் போற்றி
கலியற மகலக் களிமிகக் கொண்டு
உறவோ டுண்ணும் உயர்குணம் உற்ற
எந்தமிழ் நாட்டார் என்றும் வாழ்க !
நற்றமிழ்த் திருவளம் நாளும் சிறக்கப்
பொங்கற் புதுவளம் பொலிக என்றுமே !

க. நாராயணசாமி
வித்துவான் 2-ஆம் ஆண்டு



# நூன் மரபு.

---

உலகத் தொன்மொழிகளுள் தனு ளுயர்ந்துநின்றுலவுந் தமிழ் மொழிக்கு இற்றைக்குச் சற்றேறக்குறைய இரண்டாயிர மாண்டு கட்கு முன்னர் அற்றைப்பொழுது வழங்கிய விலக்கண நூல்களை யுஞ் சான்றோர் செய்யுட்களையு முலகியல் வழக்கோ டுடனோக்கி ஒப்புயர்வில்லா விலக்கண நூலொன்றாக்கி யளித்த வாசிரியர் தொல் காப்பியனுர், வடக்கினின்றுந் தெற்குபோந்து இன்றமிழியம்பியிசை யுற்ற தமிழ் முனிவராகிய அகத்தியனுர் மாணவர் பன்னிருவருள் புலமையாற் றலைமைபெற்றவரென்பது பண்டைத் தண்டமிழ் நல் லாசிரியர்தம் ஒருதலைத் துணிபு. அவ்வருந்தமிழ்ப் பெரியாரியற் றிய தொல்காப்பியம் மூன்றுறுப் படங்கியதொரு பிண்டமாய்க் கட்புலனுகா வுருவுங் கட்புலனுகிய வடிவு முடைத்தாக வேறு வேறு வகுத்துக்கொண்டு தன்னையே வுணர்த்தியுஞ், சொற்கியைந்து நிற்கு மோசையாகிய எழுத்தினை அவ்வெழுத்தா ளுக்கப்பட்டு இருதிணைப் பொருட்டன்மையையு மொருவனுணர்தற்குக் கருவியாகிய வோசை யாஞ் சொல்லொடுஞ், சொற்றொடர் கருவியாக வுணரப்படு மறம் பொருளின்பமு மவற்றது நிலையும் நிலையாமையுமாகிய வறுவகைப் பொருளொடும், முறையே மூன்றதிகாரங்களிலு முணர்த்துகின்றது. தொல்காப்பியப் படலங்கள் மூன்றும் முறையே ஒவ்வொன்று மொன்பது வோத்துக்களாலாக்கப்பட்ட தன்மையில் முதற்கணிற்கு மெழுத்ததிகாரம் நூன்மரபு முதலாகக் குற்றியலுகரப் புணரிய லீறுகவுள்ள வொன்பது பகுதிகளா னமைகின்றது. அதன் முத லோத்தாகிய நூன் மரபிற்குப் பெயர்க்காரணம் பல வாசிரியர்களா லும் பல்லாறுகப் படைக்கப்படுகின்றது. அவற்றையெல்லாம் நூற் கருத்துகளோடொருங்கு நடுநிலையினோக்கி உண்மையை யாராய வெழுந்ததிக் கட்டுரை யென்க.

'எழுத்ததிகாரத்தாற் சொல்லப்படு மெழுத்திலக்கணத்தினை யோராற்றாற் றெகுத்துணர்த்துதலி னூன் மரபென்னும் பெயர்த்து' என்று தொல்காப்பிய பழைய வுரையாசிரியரு முரையாசிரியரென்ற பெயராலேயே பின்னவர்களா லழைக்கப்படுபவருமாகிய ஏதமின் மாதவரா முளங்கூர் கேள்வி இளம்பூரண வடிகள் நூன்மரபிற்

குப் பெயர்க்காரணங் கூறுவர். திருவாவடுதுறை யாதீனத்தைச் சார்ந்த மாதவச் சிவஞான முனிவர் தமது முதற் சூத்திரவிருத்தி யுள் உரையாசியரை 'அங்ஙனமாயி னதிகாரமரபு எனப்படுவதன்றி நூன்மரபெனப் படாமையினது போலியுரை' யென்று கூறி மறுத் தனர். எழுத்துச் சொற்பொருள்களானுய தொல்காப்பியமென்று மவயவி யவயவத்தை யுணர்த்த நூன்மரபென்பததிகார மரபென்ற பொருளில் நிற்றலின் முனிவர் கூற்று ஆசிரியர் கூற்றுடன் முரணு வதறிக. ஆசிரியர் ஆகுபெயர்ப் பொருடோன்ற வோத்துகட்குப் பெயரிடும் பழக்கமுடைமை அகத்திணையியன் முதற் சூத்திரத்து ஆசிரியர் நச்சினுர்க்கினிய ருரைக்கு முண்மை யுரையானும் மெய்ப் பாட்டியன் முதற் சூத்திரத்துப் பேராசிரியருரையானு முணர்க. அற்றேல், இளம்பூரணர் கருத்து கொள்ளற்பாற்றெனில்,அற்றன்று. முற்றவுணர்த்தாமை இலக்கணமாகாமையிற் சொல்லதிகாரத்திற் கும் பொருட்படலச் செய்யுளியற்கும் வேண்டுமெழுத்து மரபு பற் றிய விலக்கணங்களையு மாசிரிய ரீண்டுப் பேசுதலின் எழுத்ததிகா ரத்திற்கு மாத்திரை மரபென்றல் குன்றக் கூறலாய் இலக்கண மாகாமை யுணர்க.

இனி, பன்னூல் பயின்ற செந்நெறிச் செல்வராகிய உச்சி மேற் புலவர்கொள நச்சினுர்க்கினியர் 'தொல்காப்பிய மென்னு நூற்கு மரபாந் துணைக்கு வேண்டுவனவற்றைத் தொகுத்துணர்த்தி னமையின் நூன்மரபென்னும் பெயர்த்தாயிற்' றென்றனர். சுவா மிகள், இவ்வோத்துட் கூறப்பட்டன செய்கையோத்திற்கும் பொரு ளதிகாரத்துட் செய்யுளிய லொன்றற்குமே கருவியாவதன்றி மூன்ற திகாரத்திற்கும் பொதுவாகாமையின் நச்சருரை போலியுரை யென்றனர். நச்சினுர்க்கினியர் மூன்றதிகாரங்கட்கும் நூன் மரபா மாற்றிலடைவு காட்டி வருகின்றவர் '.அம்மூவாறும்' என்ற சூத்திர முதலியவற்றுனெழுத்துக்கள் கூடிச் சொல்லாமாறு கூறுகின்றமை யிற் சொல்லதிகாரத்திற்கு மிலக்கண மீண்டுக் கூறினுராயிற்று என்று எழுதிச் செல்கின்றுர். இதனுற் சொல்லதிகாரத்திற்கு வேண்டும் மரபினையுமாசிரியர் நூன்மரபிலுணர்த்துகின்றுரென்பது தெற்றெனத் தெரியா நிற்கவுமிக்கொள்கையை மறுக்க வேறுவழி யறியாத சுவாமிகள் முதற் சில சொற்றுெடர்களை யுணர்ந்த மாத் திரையிலுண்மைப் பொருளை யுணராது மூன்றதிகாரத்திற்கும் பொது வாகாமையின் பொருந்தா தென்றவுரை போலியுரையாதலறிக.

முனிவர் நூன்மரபிற்குக் கூறிய விலக்கணமாவது நூலினது மரபுபற்றிப் பெயர் கூறுதலென்பதாம். ஆசிரியர் நூலினது மரபு பற்றிவரும் பெயர்கள் அனைத்தையு மீண்டொருங்கே கூறுமையின் நூன்மரபிற்கவர் கூறியதே விலக்கணமாயின் ஆசிரியர் தொல்காப்பி யரிடத்தவ்வுரை குன்றக் கூறலை ஏற்றுமாறறிக. அன்றியும், நூல் களின் மரபு பற்றி ஆசிரியர் நூன்மரபிற் பெயர் கூறினரெனில் நூன்மரபிற் காணப்படுங் குறியீடுகள் மட்டிலுஞ் சான்றோரிட்ட வையாகி ஏனையோத்துக்களிலு மதிகாரங்களிலு மாசிரியராளுங் குறியீடுகள் அவராற் படைக்கப்பட்டனவென்று பொருடந்து தொல்காப்பியப் பாயிரக் கருத்துடன் மாறுபடுமாற்றை யறிக. அல்லதூஉம் பெயர் கூறுகின்றவளவிலே நூலினது மரபைப் பற்றி னாசிரியரென்னுங் கூற்று, குறியீடொழிந்த வேனையிலக்கணங் களைப் படைத்து மொழிந்தனரோ அவரென்பார்க்கு 'ஆம்' என்று அறைவதனைக் காண்க. மேலும், 'மூவள பிசைத்த லோரெழுத் தின்றே', 'நீட்டம் வேண்டி னவ்வளபுடைய, கூட்டியெழூஉதலென் மனர் புலவர்'(நூன்மரபு ௬, 6 சூ) என்ற நூற்பாக்கள் நூன்மரபிற் காணப்படுதலின் நூன்மரபிற்கு முனிவர் கூறிய திலக்கணமாகாமை யுணர்க. என்னை ? அவை நூலது மரபுபற்றிப் பெயர் கூறுமையி னென்க. 'அளபிறந்துயிர்த்தலும்' என்ற நூன்மரபு இறுதிச் சூத் திரத்தாலு மஃது இலக்கணமன்மையறிக.

எழுத்ததிகாரக் குறிப்புரை யாசிரியர் 'இவ்வியலுள் இந் நூலின்கண் வழங்கப்படும் எழுத்து குற்றெழுத்து ... ... ... இடை யெழுத்து என்ற குறி முதலியவற்றை ஆசிரியர் விதிக்கின்றார். அக் குறிகளெல்லாந் தாமியற்றியவை யல்ல முன்னோரியற்றியவையென் பதை 'எழுத்தெனப்படுப', 'குற்றெழுத்தென்ப', உயிரெனமொழிப' என்ற விடத்துள்ள எனப்படுப, என்ப,மொழிப என்ற சொற்களாற் குறிக்கின்றார். அதனால் மரபு பற்றிய குறிகளை யீண்டு ஆள்கின்று ரென்பது வெளிப்படை. ஆகலின் நூற்கின்றியமையா மரபு பற் றிய குறிகளை விதிக்கு மிவ்வியலுக்கு நூன்மரபெனப் பெயரிட்டது மிகப் பொருந்தும்' என்றார். இவர்தங் கூற்றைச் சிவஞான முனி வர்தங் கூற்றிற் குரைத்தாங் குரைத்து மறுக்க. 'எனப்படுப', 'என்ப', 'மொழிப' என்ற சொல்லாட்சிகளா லெழுத்ததிகார முத லோத்து நூன்மரபெனப் பெயர் பெற்றதெனின் 'அழனே புழனே யாயிரு. மொழிக்கு, மத்து மின்னு முறழத்தோன்ற, லொத்ததென்ப வுணருமோரே', 'அவைதாம், இயற்கைய வாகுஞ் செயற்கைய

வென்ப' (தொல்-எழு-193, 197) என்ற சூத்திரங்களுட் காணும் 'என்ப' என்ற சொல்லாட்சியால் உருபியலும், 'அன்னவென்னு முவமக் கிளவியும் ... ... அன்றி யனைத்து மியல்பென மொழிப' (எழு-210 சூ) என்ற சூத்திரத்துட் காணப்படும் 'மொழிப' என்ற சொல்லாட்சியால் உயிர்மயங்கியலும் முறையே உருபு மரபு என் றும் உயிர் மயங்கு மரபு என்றும் வழங்கப் பெறுமையி னவ்வுரை போலியுரையாதல் சொல்லவும் வேண்டுமோ வென்பது.

நச்சினார்க்கினியர் கூற்றுப்படி ஆசிரியர் தொல்காப்பியம் என்னும் நூலிற்கு மரபாந்துணைக்கு வேண்டுவன யாவற்றையு மொருங்குடனுணர்த்தாமையி னதுவு மிலக்கண மன்மை யறிக. அற்றேல் நூன்மரபிற்கிலக்கணம் யாதோவெனின் நூன்மரபுச் சூத் திரங்களை உற்று நோக்க முற்றத் தோன்றுமதுவுமென்க. முதற் சூத்திரத்து முதலெழுத்து முப்பதென்றுஞ் சார்பெழுத்து மூன்றென் றுங் கூறி இரண்டாவதன்கண் சார்பு மூன்றுமாற்றை விளக்கிப் பின்னர் மூன்று முதல் பதின்மூன்றிறுதியாகவுள்ள சூத்திரங்களா னெழுத்தினளவு முதலாயின கூறியதன் பின்னர் பதினோராந் சூத் திரமுடிய சிலவெழுத்துகட்கு வரிவடிவம் பேசிப் பதினெட்டாஞ் சூத்திரத்து உயிர்மெய்யெழுத் தொலிக்குமாற்றை யாசிரியர் உணர்த்துகின்றார். பத்தொன்பது, இருபது, இருபத்தொன்றாம் சூத்திரங்களான் மெய்யெழுத்துக்களின் வகையுணர்த்திய வாசிரியர் பின்னர் முப்பது சூத்திரங்கள் முடியவும் சொற்களில் எழுத்துக்க ளொன்றனோடொன்று மயங்கு முறையில் நட்பெழுத்துக்களை விரி வாகப் பேசிப் பின்னர் உயிரெழுத்துக்களுட் சில சுட்டுப் பொருளை யும் வினாப் பொருளையு முணர்த்துகின்ற காரணத்தான் வெவ்வேறு பெயர் பெறுவதையு முணர்த்தி யிறுதிச் சூத்திரத்தாலெழுத்துகட் களபுகோடன் முறைபற்றிய விசைநூற் கருத்தை யுணர்த்தி நூன் மரபை முடிக்கின்றார். இம் முறையில் இவ்வோத்து முழுவது மெழுத்துக்களது மரபினையே வுணர்த்துவதாய் அமைகின்றது. ஆகவே, தொல்காப்பியமென்னு நூலிற்கு எழுத்தாந் தன்மையில் வேண்டும் மரபினை மூன்றதிகாரங்கட்கும் பொதுவான முறையிற் றொகுத்துணர்த்தினமையி னூன்மரபாயிற்றென்க. எழுத்தொழிந்த வேனை மரபுகளைச் சொல்லதிகாரத்துக் கிளவியாக்கத்து மகத்திணை யியற்கண் 'மரபுநிலைதிரியா' என்ற சூத்திரத்தும் 'பாட்டுரை நூலே' முதலிய செய்யுளியற் சூத்திரங்களிலும் மரபியலிலு மாசிரியரோது

மாறறிக. ஆசிரியர் மூன்றதிகாரங்களிலுங் காணப்படுந் தனி யெழுத்துக்களின் மரபையே நூன் மரபிற்பேசியுள்ளார். எழுத்து நூன்முழுதும் பரந்துபட்டவா றென்னையெனின் எழுத்தாலாயது சொல்லாதலாலும் சொற்றொடர் கருவியாக வுணரப்படுவது பொருளாதலாலும் எழுத்து நூன்முழுதும் பரந்து நிற்றல் காண்க. ஏனைச் சொற் பொருளிலக்கண மரபுகள் முறையே இரண்டதிகாரங் கட்குமோரதிகாரத்திற்கு மரபாவதன்றி நூன்முழுமைக்குமாகாமை யறிக. அன்றியு மூன்றதிகாரங்கட்கும் பொதுவாய் நில்லாமையி னன்றே வாசிரியர் ஒற்றளபெடை முதலிய செய்யுளியலிற் காணப் படுமெழுத்துமரபுகளை நூன் மரபிலுணர்த்தாததென்க. எனவே, நூன்மரபென்பது தொல்காப்பிய மென்னும் நூற்கு எழுத்தாந் தன்மையின் மூன்றதிகாரங்கட்கும் பொதுவாய் நிற்கு மரபுகளை யுணர்த்தினமையாற் பெற்ற பெயரென்பது நன்கு விளங்கும்.

இதுகாறு போராற்று னூன்மரபிற்குப் பண்டைப் புலவர் களு மிற்றைக் கற்றுருங் கூறிய விலக்கணங்களையுமவை பொருந்து மாற்றையு மாராய்ந்தோம். இவ் வாராய்ச்சியிலேற்பன கொண்டு ஏலாதன கழித்தல் தமிழ் மாணவர் கடமை என வுரைத்திதனை முடிப்பாம்.

T. V. சீநிவாசன்
வித்துவான், 4-ம ஆணடு

---

# புயல்.

—※—

1 தங்கம் விளைகின்ற எங்கள் தமிழ்நாட்டின்
பொங்கும் வளமெல்லாம் போயொழியப்—பொங்கித்தான்
எங்கும் அழிகென வெண்ணியே பாய்ந்துளீ
வங்க விரிகடல்வாய் வந்து.

2 மடமட வென்று மடக்கி யடித்துத்
தடதட வென்று தருக்களைத் தள்ளிப்
படபட வென்று பதைத்திட மக்கள்
அடியடி யென்றே யடித்து.

3 கணக்கற்ற வாழை கமுகிளந் தெங்கும்
உணத்தக்க மாவும் பலாவும்—பிணக்கற்
றிருக்கவும் தம்முள் இரும்பகை யாற்சீறிப்
பொருது மடிந்ததைப் போல்.

4 காய்கிளை பச்சிலையும் கரும்புகளும் வெட்டுண்டு
மாய்ந்த மறவீரர் தம்முறுப்பை மானக்
கிடந்தனவே நல்ல கிளைகளிற்றைப் போல
ஒடிந்த மரவடிகள்.

5 அடித்துப்பூ தேவி யடியின்கீழ்த் தள்ளி
முடிபணிய வைத்தாய் முழங்கு—படைத்தலைவன்
மாற்றுரை வென்றடக்கி மன்னன் கருங்கழற்கீழ்ப்
போற்றித்தாழ் விப்பதைப போல்.

6 இலையமுதாம் வெற்றிலைகள் ஏழையாரின் இல்லங்கள்
அலைந்து குலைந்துன்றல் ஆன—நிலைதன்னைச்
சொன்றாற் சிறியோர் செயலெனவே சொல்லலாம்
என்னே யுனது செய்கை.

7 எல்லையிலாத் துன்பமுறும் ஏழையர்கள் வாழ்வதற்கே
நல்லார் நிதியீந்தார் நானிலத்துச்—செல்வமிக
எய்திப் பலவூழி வாழ்வார் "இரிபுயலே"
உய்தியும் உண்டோ உனக்கு.

சி. முத்துச்சாமி,
புலவர், முகலாண்டு.

# சொல்லேருழவர்.



உழவர் என்றலுமே காடு கெடுத்து நாடாக்கிக் கரம்பு திருத்திக் கழனியாக்கி ஏரானுழுதலைச் செய்து விதைத்து, வளர்த்து, அறுத்துப் பிறர் பிற தொழில்களாற் பொருளெய்திய வழியும் உணவின் பொருட்டுத் தங்கண் வந்து நிற்கும் பெற்றிவாய்ந்த

உழுதற்றொழிலில் ஈடுபட்டாரே நம் மனக்கண்முன் வந்து நிற்பர். உலகில் மக்கள் வாழ்வாங்கு வாழ்தற்கு இவரேயன்றி வேறு பல வுழவரும் வேண்டப்படுவர். அவருள் வில்லேருழவரும் சொல்லே ருழவரும் குறிப்பிடத்தக்கவர்.

உழவர், நிலங்களை யுழுது விதைதூவிப் பயன்விளைத்து நாட்டிலுற்ற பசி நீக்கி உயிர்காத்து நிற்பர் வில்லேருழவரோ பகைவர் மார்பாகிய நிலத்தில் வில்லாகிய ஏரானுழுது குருதியெனும் நீர் பாய்ச்சி வீரமெனும் உரமிட்டு வெற்றியெனும் பயிர் விளைத்து புகழென்னும் பயன்பெற்று இன்புறுவர். சொல்லேருழவரோ வெனின் மக்கள் மனமெனும் நிலத்திற் சொல்லாகிய ஏரானுழுது, அறிவென்னும் விதைதூவி, அன்பெனும் நீர்பாய்ச்சி, அறியாமைக் களையகற்றி இன்ப வாழ்வாங் கனிபறித்து யாவரும் உண்ண வழங்கி அவர் உண்டு மகிழக்கண்டு, தாம் மகிழ்வர்.

புலனிலுழும் உழவர்க்கு ஏரும் மாடுமாகிய புறக்கருவிகள் வேண்டும். ஆனால் சொல்லேருழவர்க்கெனில் புறக்கருவிகள் யாவும் வேண்டப்படா. அகக்கருவிகளாகிய வாயையும் நாவையும் பறை யாகவும் குணிலாகவும் கொண்டு அறிவுப்பறை சாற்றுவர்.

பிற உழவருடைய கருவிகள் பயன்கொள்ளக் கொள்ளத் தேய்ந்து, கூர்மழுங்குந் தன்மையவாகும். ஆனால், சொல்லேருழவ ருடைய கருவிகளான நாவும் அறிவும் தொழிற்படப் படக்கூரிய இயல்பினவாகும்.

வெண்ணிலவும் செங்கதிரும் மண்ணகத்தே இருள் விலக்கும் இரு பெருஞ் சுடர்களேயாயினும் செங்கதிர்தரும் சிறந்த பயனளவு வெண்ணிலவு விளைக்காது. இது போன்றே வில்லேருழவரும் சொல்லேருழவரும் நாடுயரப் பாடுபடும் நல்லேருழவரெனினும் வீர மொன்றையே கொண்ட வில்லேருழவரினும் கூர்த்த மதியும் புல மையும் மிக்க சொல்லேருழவரே சிறந்தோராவர்.

வில்லேருழவருடன் பகைகொளின் கேடுவருதல் ஒருதலை யன்று. ஒருக்கால் வரினுந்தனக்கேயாம். ஏனைச் சொல்லேருழ வருடன் பகை கொண்டாலோ தனக்கேயன்றித் தன்னைச் சார்ந் தாருக்கும் கேடுவருதற்றுணிபாம்.

இதனாற்றான், வையமுய்ய வழி வகுத்த வள்ளுவனாரும்,

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை

என்று கூறினர்.

இத்தகு பெற்றிவாய்ந்த சொல்லேருழவர் நாட்டிற்காற்றிய நற்றொண்டுகள் மிகப்பலவாம். நாட்டின் நன்னலமே தன்னலமெனக்கொண்டு, மக்களை அறிவின்மை சூழ்ந்துகொள்ளும் நேரத்திலே, ஆட்சி பீடத்திலுள்ளார், ஆதிக்கவெறிகொண்டு ஆணவம் பிடித்தலையும் காலத்திலே அவர்கள் நீதியிற் பிறழ்ந்து நேர்மையிற் றிரிந்து, குடிகட்குக் கொடுமை யிழைக்கும் பொழுதிலே, அரசவை சென்று, இருக்கும் நிலையை அறிவுறுத்திச் சீர் செய்வர். புகழேல் எஞ்சாது மனமார வாழ்த்தும் பெருந்தன்மையும் பழியேல் அஞ்சாது எதிர்த்துக்கூறும் தறுகண்மையும் அவர்பாலுண்டு.

இவற்றைச் சற்றேறக்குறைய ஈராயிரமாண்டுகட்கு முன்பு நடந்த நிகழ்ச்சி யொன்று மெய்ப்பித்தல் காணலாம். அன்று பாண்டிநாட்டை அறிவுமிக்க வோரரசன் ஆண்டுவந்தான். எனினும், அவன் ஆட்சியில் நெறி தவறியதோர் நிகழ்ச்சி நடந்துவிட்டது. காரணம், வரும் பொருளுரைத்து, மக்கள் வாழும் வகை பல கண்டு, நாட்டை நல்ல முறையிலே அரசன் ஆளுதற்கு நீங்காத் துணையா நிற்க வேண்டிய அமைச்சர் குழாம் அரசன் சிந்தை சென்ற வழியே சென்று, தங்கள் கடமையை மறந்து ஆரவார நீர்மையையே மேற்கொண்டொழுகுவாராக அரசனைச் சூழ்ந்திருந்தனர். மக்கள் வதிந்த உலகமும் மன்னன் வாழ்ந்த உலகமும் இருதுருவங்களாயின. குடிதழீஇக் கோலோச்ச வேண்டிய கொற்றவன் கொடுங்கோலனானன். அரசனின் பணியாளர் நெறி பிறழ்ந்து வரி கேட்டனர். அவ்வளவு வரிகொடுக்க வியலாது வருந்தினர் மக்கள். வரிகேட்ட வினையாளர் அரசன் ஆணை கூறி மக்களை அச்சுறுத்தினர். ஆதரவின்றி அல்லலுற்றனர் மக்கள்.

இந்த நிலையில் மக்களுறும் இன்னல் நாடாளும் மன்னனுக்குத் தெரியவில்லை, அறிவாற் சிறவாத அமைச்சர் சூழ்ந்திருந்த காரணத்தினால். ஆனால், மக்கள் நலத்தில் மாறாக் காதல் கொண்ட புலவரொருவருக்கு, அரசினர் செய்யும் அட்டூழியமும் மக்கள் அல்லலுற்று ஆற்றாதழுவதும் புலனாயிற்று. இக் கொடுமையைக் களைய விரும்பினர், தொல்லையுற்றுத் துடிக்கும் மக்கள் சிந்தும்

கண்ணீர்த்துளிகள் காலத்தின் வெம்மையால் வெந்நீர் வெள்ளமாக மாறி, அரசின் ஆணி வேரிற் பாய்ந்து அழித்தொழிக்கும் என்பதை அறிந்ததால். சூழ்நிலையால் அறிவு மயங்கியிருந்த அரசனைத் தெளிவுறுத்தி அறிவின்வழிச் செலுத்துவது தம் கடனென உணர்ந்த அவர் அரசவை சென்றார். காவலனைக் கண்டு குமுறும் உள்ளத்துடன் கூறினார், நாட்டின் நிலையை மட்டுமல்ல,-காவலனின் கடமையையும் இணைத்து. ஆவேசத்துடனல்ல - அன்புடன் அறிவையும் கலந்து.

"காவல! களிறோ பெரிது. அதற்குணவிட்டுப் புரத்தலோ கடினம். விளைந்த நெல்லையறுத்து பக்குவமாக்கிக் கவனமாக நாமதற்கு அளிப்போமாயின், ஒருமாவிற் குறைந்த நிலத்தில் விளையும் விளையுளும், பல நாட்களுக்காகும். அஃதன்றி நம்மிடத்தில் நூற்றுக்கணக்கில் நிலமுள்ளதென்று, தானேயுண்ணுமாறு யானையை அதன் கட்போக்கினுல் அது வாயால் உண்பதை விடக் காலால் மிதித்து அழிப்பதே மிகுதியாகும். அதுபோல அரசன் இறை கொளும் நெறியறிந்து கேட்டால், மக்கள் கோடிக்கணக்கிற் கொடுத்துத் தாமும் தழைத்து வாழ்வர். அஃதன்றி அறிவால் மெலியனாகி முறையறியாத சுற்றத்தோடுங்கூடி, அன்பு கெடக்கொள்ளும் பொருட் குவியலை விரும்பினுல், அந்த யானை புக்கபுலம் போலத் தானும் வாழாது உலகையும் வாழவிடாது கெடநேரிடும். ஆதலால் மக்களுறும் துன்பம் துடைப்பாயாக, வரி வீடு செய்வதன் மூலம்", என்று நீதி நெறி கூறினார். அறிவு விளக்க மாற்றி மக்கள் உள்ளத்தை எதிரொலித்தார்.

இதோ அவர் பாடிய பாடல்:

"காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும
மெல்லியன் கிழவ னாகி வைகலும
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமுங் கெடுமே."

(புறம்-க௮௪)

புலவர் கூற்றை அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த பாண்டிய மன்னன் மயக்கம் நீங்கி அறிவு தெளிந்து கூடா வரிகளை வீடு செய்து மீண்டும் அறிவுடை நம்பியாயினன். ஆம்! அந்த மன்னன்தான் மதுரையிலிருந்து மங்காப்புகழுடன் செங்கோலோச்சிய மாத்தமிழன் மறவேந்தன் பாண்டியன் அறிவுடை நம்பி. அவனைப் பெயருக்கேற்ற பண்பும் கொள்ளுமாறு செய்த சொல்லேருழவர் தான் நட்பின் இலக்கணத்திற்கு இலக்கியமாக இலங்கியவரும் பேரறிஞரும் பிசிரென்னும் ஊரினருமாய ஆந்தையாரென்னும் பெரும்புலவர்.

இன்னும், இப்புலவரேற்றைப் போன்று எண்ணற்ற புலவர் பெருமக்களைப் பெற்றுத் திகழ்ந்தது நம் அருமைத் தமிழகம். அவர்கள் மக்களிடத்து மாறாத அன்புடையாராய், சொல்லேருழவராய், சோர்விலராய், அஞ்சா நெஞ்சினராய், உண்மைக்கு உயிருங் கொடுக்கும் உரனுடையராய், மொழியின் உயர்விற்கு, நாட்டின் நலத்திற்கு, இனத்தின் ஏற்றத்திற்கு, அறத்தின் ஆக்கத்திற்கு, அல்லும் பகலும் ஒல்லும் வகையெலாம் உழைத்து வந்தனர். அவர்கள் ஒல்லாப் பகைஞர் வில்லேருழவரெனினும் அஞ்சாது சொல்லேருழவராய் புல்லரும் நல்லாராய்ப் போற்றும் வண்ணம் வாழ்ந்து நாம் வாழ்வதற்கும் வழிபல வகுத்துச் சென்றுள்ளார்கள். அப்பெருமக்கள் வகுத்தவழி நடப்பதன் மூலம் பிறவி பெற்ற பயனை நம் மக்கள் பெறுவார்களாக! அவர்கள் வளர்த்துச்சென்ற அன்பு நெறி வளர்க! அறநெறி வாழ்க!!

**ந. அண்ணுச்சாமி,**
வித்துவான் 2-ஆம் ஆண்டு.



திருவள்ளுவர் தமிழ் மாணவர் கழக

# 25-வது ஆண்டு (1952-53) அறிக்கை.



முத்தமிழ் மாண்பினை பயிலும் மாணவர்கள் தாம் அறிந்த கருத்தை ஏற்ற வகையில் எழில்பெற எடுத்துக் கூறுவதில் திறமை பெறுவதற்கான வாய்ப்பை உண்டாக்கிக் கொள்ள "இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றதுணர விரித்துரையாதார்" எனும் அமுத மொழி வழங்கிய வள்ளுவப் பெருந்தகையின் பெயரால் தோன்றிய இக்கழகம் "குறு குறு நடந்து சிறுகை நீட்டி, இட்டுந் தொட்டும் கவ்வியுந் துழந்தும் நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்க்கும்" தனது மழலைப் பருவம் நீங்கி இளமைப் பருவத்தையும் கடந்து இருபத்தைந்தாண்டுகள் நிரம்பப் பெற்ற காளை யன்றனைப் போல் மிளிர்ந்து பொலிவு முதிர்த்து இவ்வாண்டிலும் செயற்கரும் பணிகள் பல புரிந்து வந்துள்ளது. அச் செயல்களே ஈண்டு குறிக்கப்படுகின்றன.

கழகத் தலைவர்:- உயர்திரு பெ. திருஞானசம்பந்தம் அவர்கள் M.A., L.T.
செயலாளர்:- அ. துரைராசன். (மூன்றாம் ஆண்டு)
செயற்குழு உறுப்பினர்:- 1. ச. முத்துக்குமாரசாமி (நான்காம் ஆண்டு)
2. அ. திருநாவுக்கரசு (இரண்டாம் ஆண்டு)
3. வ. இலக்குவன் (முதலாம் ஆண்டு)
4. சி. இராமகிருட்டினன் (புகுமுகம்)

### கழகத் தொடக்க விழா.

இக்கழகத்தின் 25-ம் ஆண்டுத் தொடக்கவிழா வள்ளுவர் ஆண்டு 1983, ஆவணித்திங்கள் முதல் நாள் (16—8—53) சனிக் கிழமை மாலை 5-மணிக்கு, திருவண்ணாமலை யாதீனம் குன்றக்குடி தெய்வத்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசிரிய சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது.

அவ்வமயம் சென்னை, பச்சையப்பன் கல்லூரி, தமிழ் விரிவுரையாளர் உயர்திரு. அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள் M. A. "தமிழ் பண்பு" என்னும் பொருள்பற்றி விரிவானதோர் சொற் பொழிவு நிகழ்த்தினர்.

**கிழமைக் கூட்டங்கள்.**

"கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவை யஞ்சு வார்"

ஆகலின் மாணவர்கள் அச்சம் நீங்கி, கொண்ட கருத்தினைக் கூறுதற்கு பயிற்சி அளிப்பது இக்கிழமைக் கூட்டங்களாகும். இவைகட்குப் பெரும்பான்மை ஆசிரியரும் சிறுபான்மை மாணவர்களும் தலைவர்களாவார். சொற்பொழிவாளர்கள் மாணவர்களே யாவர். இவ்வாண்டு நடந்த கிழமைக் கூட்டங்கள் வருமாறு:-

| எண் | நாள் | தலைவர் | சொற்பொழிவுப் பொருள் |
|---|---|---|---|
| 1 | 28—8–52 | உயர்திரு பெ. திருஞானசம்பந்தம் M.A., L.T. | "கடமையும் உரிமையும்" |
| 2 | 5—9–52 | ,, வித்துவான் ம. ரா. கிருட்டினமூர்த்தி | "வள்ளலார் சீர்திருத்தவாதியா ?" |
| 3 | 12—9–52 | ,, S. பாலசுப்பிரமணியம் | "எது நாகரிகம் ?" |
| 4 | 28–10–52 | ,, பெ. திருஞானசம்பந்தம் M.A , L.T. | "படக்காட்சியால் நன்மையா, தீமையா ?" |
| 5 | 7–11–52 | திரு. சோம. ஐயாறு 4-ஆண்டு | "இலக்கியமும் வாழ்வும்" |
| 6 | 21–11–52 | திரு. T. V. சீனிவாசன் 4ம்-ஆண்டு | "இலக்கிய இன்பம்" |
| 7 | 28—1–53 | உயர்திரு. S T. சீனிவாசாச்சாரியார் M.A., L T. | "இலக்கியமும் அரசியலும்" |
| 8 | 17—2–53 | ,, வித்துவான் வி. அ. அரங்கசாமி | "நாட்டுக்கு நலன் பயப்பவன் செலவாளியா ? சிக்கனக்காரனா ?" |

**சிறப்புக் கூட்டங்கள்.**

மொழிவளர்ச்சி, நாட்டு மக்கள் முன்னேற்றம் ஆகிய பல துறைகளிலும் தொண்டுபுரிந்த பெரியோர்களின் நினைவுநாட்களே இச்சிறப்புக் கூட்டங்களாகும். இவ்வாண்டு நடந்த சிறப்புக் கூட்டங்கள் 10 ஆகும். அவை வருமாறு:-

| எண் | கூட்டம், நாள் | தலைவர் | சொற்பொழிவாளர் | பொருள் |
|---|---|---|---|---|
| 1 | மறைமலையடிகள் 13–10–52 | திரு. பெ. திருஞானசம்பந்தம் அவர்கள் M.A., L.T. | திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் (திருச்சி) | "மறைமலையடிகளார் வாழ்க்கை" |
| 2 | பாரதி விழா 23–10–52 | திரு. புலவர் குழந்தையா அவர்கள் திருவையாறு. | "மாணவர்கள்" | "பாரதி வகுத்த பாதை" |
| 3 | தொல்காப்பியர் விழா 10–11–52 | வித்துவான் திரு. மு. அருணாசலம் பிள்ளை அவர்கள் அண்ணாமலைநகர் | "தலைவர்" | "தொல்காப்பியம்" |
| 4 | இளங்கோ விழா 11–11–52 | ப. கிருட்டினமூர்த்தி அவர்கள் M.A. B O.L. (Hons) குடந்தை | "தலைவர்" | "சிலம்பு" |
| 5 | வ. உ. சி விழா 28–11–52 | K. S. சுப்பையா B.A. B.T. தஞ்சை. | "மாணவர்கள்" | "வ. உ. சியின் வாழ்வில் நாம் அறிவது" |
| 6 | கம்பர் விழா 13–12–52 | புலவர். வீ. உலகவூழியர் அவர்கள் (சேலம்) | "தலைவர்" | 'நவில்தொறும்நயந்தருவது' |

| எண் | கூட்டம், நாள் | தலைவர் | சொற்பொழிவாளர் | பொருள் |
|---|---|---|---|---|
| 7 | சேக்கிழார் விழா 18-12-52 | ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், மதுரை. | "தலைவர்" | "சேக்கிழார் சிறந்த உரையாசிரியர்" |
| 8 | 20-1-53 | பெ. திருஞான சம்பந்தம் அவர்கள் M.A. L.T. | திரு மறை. திருநாவுக்கரசு அவர்கள், தூத்துக்குடி | "மாணவருக்கு ஒருசொல்" |
| 9 | 29-1-53 | கவிராஜபண்டிதர் மீ. கதிர்வேற்பிள்ளையவர்கள் நெல்லை. | "தலைவர்" | "கம்பனின் கவிச்சுவை" |
| 10 | காந்தியடிகளார் 31-1-53 | திரு. இராம ராவ் அவர்கள் திருவையாறு. | "மாணவர்கள்" | "காந்தியடிகள் வாழ்வு" |

**பாராட்டு விழா.**

இவ்வாண்டு சிறப்பு நிகழ்ச்சிகளில் ஒன்று முன்னாள் இசையாசிரியர் உயர்திரு. ப. சுந்தரேசன் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழக இசை விரிவுரையாளராக அமர்ந்தமைக்கு, அண்ணாமலைப் பல்கலைக் கழக தமிழ் விரிவுரையாளர் உயர்திரு. வித்துவான் மு. அருணாசலம் பிள்ளையவர்கள் தலைமையில் 10—11—52ல் பாராட்டுரை வழங்கியதாகும்.

**கல்லூரி நாள்.**

இவ்வாண்டில் நடைபெற்ற இக் கல்லூரிநாள் இதுவரைகல்லூரி வரலாற்றில் காணப்பெருத சிறப்புறு நிகழ்ச்சியாகும். நீரின்றமையாயாக்கைக்கெல்லாம் உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரன்றோ? ஏனெனின் உண்டி முதற்றல்லவா உயிர். அவ்வுணவாலுளதாகியது உடம்பு. எனவே மாணவர்களுக்கு உண்டியும் உறையுளும் அளித்த

மன்னர் சரபோஜி, மன்னிய பெரும்புகழ் பன்னீர்ச்செல்வம் தமிழ் வளர்த்த தமிழவேள் உமாமகேசுவரனுர் ஆகியோருக்கு நன்றி கூறும் முகத்தான் கொண்டாடப் பெற்றதே இக்கல்லூரி நாளாகும். இதனை இக்கழகம் "வித்யா விகாசினி சபா"வைச் சேர்ந்து கொண்டாடியது. இவ்விழாவினுக்கு தஞ்சை உயர்திரு. A.Y. அருளானந்த சாமி நாடார் அவர்கள் தலைமை தாங்கினர். தஞ்சை உயர்திரு வித்துவான் ஏகாம்பர நாட்டார் அவர்கள் "பன்னீர்ச் செல்வம்" அவர்களைப் பற்றியும், கல்லூரி வடமொழி விரிவுரையாளர் உயர்திரு. சாமிநாத சாஸ்திரி அவர்கள் "சரபோசி"யைப் பற்றியும், மற்றும் மாணவர் பலரும் சொற்பொழிவாற்றினர்.

**செயற்குழுக் கூட்டம்.**

இவ்வாண்டில் இக்குழு நான்குமுறை கூடியது. முதற் கூட்டம் தொடக்க விழாவினுக்குத் தலைவர், சொற்பொழிவாளர் வரவழைப்பது குறித்தும், இரண்டாவது கூட்டம் வெள்ளி விழா மலர் வெளியிடுதலைப் பற்றியும் நாடகம் அமைப்பது பற்றியும், மூன்ருவது கூட்டம் மலரில் வெளியிடும் பகுதி வரையறை செய்யவும் ஆண்டுவிழாவினுக்குத் தலைவர் சொற்பொழிவாளர் அழைப்பது பற்றி முடிவு செய்யவும், இறுதிக் கூட்டம் மலருக்கான தொகை வசூலிப்பது குறித்தும் விவாதித்துத் தீர்மானிக்கக் கூட்டப்பட்டன.

**நூல் நிலையம்.**

கழகச் சார்பில் அமைந்துள்ள நூல் நிலையத்தில் 200 நூல்கள் உள்ளன. கழக உறுப்பினரின் பொது அறிவு வளர்ச்சியுறும் பொருட்டு "தினமணி" என்ற செய்தித்தாளும் "கலைமகள்" "கலைக் கதிர்", "மஞ்சரி", "செந்தமிழ்ச் செல்வி", "குருகுலம்" ஆகிய திங்கள் இதழ்களும் தருவிக்கப்படுகின்றன. " அமெரிக்கன் ரிபோர்ட்டரு"ம் வரவழைக்கப்படுகின்றது.

கழக நிதிக்காக இவ்வாண்டு மாணவர்களுள் கல்லூரி மாணவர்களிடமிருந்து ஆறுரூபாயும், உயர்நிலைப்பள்ளி மாணவர்களிடமிருந்து ஐந்து ரூபாயும் வசூலிக்கப்பட்டது.

**போட்டிகள்.**

ஆண்டுகள் தோறும் நடத்துவதுபோலவே இவ்வாண்டும் கவிதை, கட்டுரை, பேச்சு, இசை, ஒப்பித்தல், மாறுவேடம் ஆகிய போட்டிகள் நடத்தப் பெற்றன. மேலும் கதை. நாடகம் ஆகிய இவைகளுக்கான பரிசுப்போட்டி அமைத்தது இவ்வாண்டிலேதான் ஆகும். மற்றும் செங்கோட்டையா திருக்குறள் பரிசுக்கான தேர்வும் நடைபெற்றது.

பரிசு பெற்றோர் விபரம் வருமாறு:

| போட்டி | முதற் பரிசு பெற்றவர் | முதற் பரிசு அளித்தவர் | இரண்டாம் பரிசு பெற்றவர் | இரண்டாம் பரிசு அளித்தவர் |
|---|---|---|---|---|
| கட்டுரை | சி. இராமலிங்கம் I.U.C. | பெ. திருஞானசம்பந்தம் M.A., L.T. | ச. முத்துக்குமாரசாமி IV.U.C. | கழகம் |
| கவிதை | வ. இலக்குவன் I.U.C. | ம. ரா. கிருட்டினமூர்த்தி | ந. சபாபதி. II.U.C. | ” |
| பேச்சு | ந. புதுவைநாயகம் III U.C | வி. அ. அரங்கசாமி | மா சின்னு III.U.C. | ” |
| | | | வீ. சண்முகசுந்தரம் I.U.C. | ” |
| நாடகம் | சொ. இராசன் I.U.C. | கழகம் | த கோடப்பிள்ளை I.U.C. | ” |
| கதை | ந. சபாபதி II.U.C. | கழகம் | C. கோபாலன் IV.U.C. | ” |
| இசை | பெ. சீனிவாசன் III.U.C. | ப. சுந்தரேசன் (அண்ணமலை நகர்) | அநந்தநாராயணன் I.U C.<br>(3ம் பரிசு)<br>சுப்புரத்தினம் III.U.C.<br>(4ம் பரிசுகள்)<br>K. பழநிவேலு II.U.C.<br>P. கோமதிசங்கரன் II.U.C. | பெ. திருஞான சம்பந்தம் M.A.,L.T.<br><br>கழகம்<br>T. P. திருஞான சம்பந்த தேசிகர் |
| ஒப்பித்தல் | இராமநாதன் | கழகம் | இராமலிங்கம் A.<br>3ம்பரிசு செங்கோடுவேலப்பன் | கழகம்<br>” |
| மாறுவேடம் | Bஸ்டாலின் | கழகம் | கோமதிசங்கரன் }<br>S. மாணிக்கம் } | ” |
| செங்கோட்டையா திருக்குறள் தேர்வு இறுதி நிலை | T. V. சீனிவாசன் | கோவை திரு. V. S. செங்கோட்டையா | ச. முத்துக்குமாரசாமி | ” |
| முதனிலை | V. பாலசுப்பிரமணியன் | கோவை திரு. V. S. செங்கோட்டையா | க. நாராயணசாமி | ” |

மாணவர் மன்றம் நடாத்திய வள்ளலார், வள்ளுவர் கட்டுரைப் போட்டியிலும், மற்றும் கதை, கட்டுரை, கவிதை, ஓவியம் ஆகிய போட்டிகளிலும் பலமாணவர்கள் பரிசுகளும் சான்றிதழ்களும் பெற்றுள்ளனர். கட்டுரைப்போட்டியில் முதற் பரிசான வெள்ளிக்கோப்பையை திரு. வ. இலக்குவன் பெற்றதும், கவிதை இரண்டாவது பரிசான வெள்ளிப் பதக்கத்தை திரு. N. சபாபதி பெற்றதும், தஞ்சை நாட்டார் பேரவையார் நடத்திய போட்டியில் முதற்பரிசு திரு. N. திருநாவுக்கரசும், இரண்டவது பரிசு திரு. T. V. சீனிவாசனும் பெற்றதும் குறிப்பிடத்தக்கதாகும்.

### வெள்ளி விழாத் திறப்பு

இக்கழகத்தின் வெள்ளி விழா 7–3–53ல் சென்னை மேயர் உயர்திரு T. செங்கல்வராயன் அவர்கள் B.A., LL.B. தலைமையில் துவங்கியது. முதற்கண் இறைவணக்கம் பாட, கல்லூரித்தலைவர், விழாத்தலைவர் சொற்பொழிவாளர் மற்றுமுள்ளவர் அனைவரையும் வரவேற்றுப் பேசினார்கள். பின்னர் செயலாளர் அறிக்கைப் படித்தார். போட்டிகளில் வெற்றிபெற்ற மாணவர்களுக்குப் பரிசளிக்கப் பட்டது.

உயர்திரு T. செங்கல்வராயன் அவர்கள் திறப்புரையில் கூறியதாவது:- "தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் இறைத்தன்மையோடு தொடர்புடையன. தமிழன் தான் பிறருக்கு அடிமையாக வாழவோ, பிறரை அடிமைப்படுத்தவோ முயலமாட்டான். "யாமார்க்கும் குடியல்லோம்" என்னும் அப்பரின் அருண் மொழிகளை உணர்ந்தவன். நமது அருந்தமிழ் நூல்களைப் பிறமொழிகளில் பெயர்த்தால்தான் தமிழ் ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி இசை கொண்டு வாழ முடியும். எனவே ஏனை மொழிகளிலும் பயிற்சியுடையராதல் தமிழரது கடமையாகும். இதற்குத் தமிழ் ஆட்சிமொழியாக மாறவேண்டும். வீணில் நாத்திகம் பேசுதல் கூடாது".

பின்னர் திருச்சி, தூய சூசையப்பர் கல்லூரி, தமிழ்த்துறைத் தலைவர் உயர்திரு ரம்போலா மாஸ்கரேனஸ் அவர்கள் "இலக்கிய நோக்கம்" என்னும் பொருள் பற்றி விரிவானதோர் சொற்பெருக்காற்றினார்கள். அதன் சுருக்கம் வருமாறு:- சிறந்த சொற்களில் உயர்ந்த எண்ணங்களைப் பதியவைப்பதுதான் இலக்கியமாகும்.

இலக்கியப் பயிற்சியால் தாம் உற்ற துன்பத்தினைப் போக்கிக் கொள்ள வியலும். வாழ்க்கையில் நம்பிக்கை கொள்ளுவதுபோல் இறைவன் உண்டு என்பதிலும் நம்பிக்கை கொள்ளவேண்டும். யாப்பு, சொல்லடுக்கு, அணிச்செறிவு ஆகியவற்றால் இலக்கியத்தின் பண்பு உயர்ந்துவிடாது. மக்கள் வாழ்க்கையின் சீரிய கருத்துக் களின் தொகுப்பே இலக்கியத்தை நிறைவு படுத்தமுடியும். மக்களை நன்னெறியில் படரச்செய்வதே இலக்கியத்தின் உயரிய நோக்க மாகும்.

பின்னர் 7 மணிக்கு அண்ணாமலைப் பல்கலைக்கழக இசை யாசிரியர் உயர்திரு. ப. சுந்தரேசன் அவர்கள் குழுவினரால் இரண்டு மணி நேரம் இன்னிசை விருந்து நிகழ்த்தப் பெற்றது. விழா விணுக்கு வந்திருந்து சிறப்பித்த அனைவருக்கும் செயலாளர் நன்றி கூற விழா இரவு 10 மணிக்கு இனிதே முடிவுற்றது.

### வெள்ளி விழா.

மீண்டும் மறுநாள் (8—3—53, ஞாயிறு) மாலை 6 மணிக்கு தஞ்சை மாவட்டத் தண்டல் தலைவர் உயர்திரு. T. K. பழநியப்பன் அவர்கள் I. A. S. தலைமையில் வெள்ளி விழா தொடங்கியது. அது போது அண்ணாமலைப் பல்கலைக் கழக தமிழ்த்துறைத் தலைவர் உயர் திரு டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் M.A. Ph.D. "வள்ளுவர் காட்டிய வழி" என்னும் பொருள்பற்றிச் சிறந்ததோர் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

முதற்கண் கல்லூரித்தலைவர் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில் விழாத்தலைவர், சொற்பொழிவாளர் ஆகிய இருவர் தம் தொண்டினைப் புகழ்ந்துரைத்தார்.

பின்னர் தலைவர் தமது முன்னுரையில் மற்றெந்த நூலாசிரி யர்களிடமும் காணமுடியாத ஒரு சிறப்பியல்பு திருவள்ளுவரிடம் உண்டு என்றும், அது இரண்டடிகளில் தாம் கருதிய பொருள்களை னைத்தையும் தொகுத்துக் கூறும் தனிச்சிறப்புடையது என்றும் குறிப்பிட்டார்.

சொற்பொழிவாளர் தமது சொற்பொழிவில் குறிப்பிட்டதன் சுருக்கம் வருமாறு:- "பன்னீர்செல்வம், தமிழவேள் உமாமகேசுவரம் ஆகிய இருவரும் தமிழுக்குப் பெரிதும் பாடுபட்டவர்களாவர்.

வள்ளுவர் காலம் புத்தநெறி நம் நாட்டில் பரவியிருந்த காலமாகும். புத்தநெறி பிறப்பைத் துன்பமாகக் கருதுகின்றது. ஆனால் வள்ளுவர் பிறப்பையே இன்பமெனக்கொண்டு வேண்டுகின்றார். இறைநெறியடைய இல்லறமே துறவறத்திலும் மிகச் சிறந்தது என்பது வள்ளுவர் கருத்து. ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்லறநெறியே வள்ளுவர் காட்டும் செந்நெறியாகும். "இயல்புடைய மூவ" ரென்றது துறந்தார், துவ்வாதார், இறந்தார் எனப்பட்ட மூவரேயாகும். தன்னைப்போல் பிறரை எண்ணி அவருறும் பிணியைத் தாம் உற்றதாக உணர்ந்து அதற்குத் தாம் என்ன மாற்றுச் செய்து கொள்ளுவோமோ, அதையே நாம் அவருக்குச் செய்யவேண்டும். இது ஏசுநாதர் காட்டிய "பிறன் உனக்கு எதைச் செய்யவேண்டுமென்று விரும்புகின்றாயோ அதனையே நீயும் அவனுக்குச் செய்" என்னும் நெறிக்குப் பொருந்துவதாகும். ஊழ் என்று காரணங் காட்டி வாளாவிருத்தல் வள்ளுவருக்கு உடன்பாடன்று. குறளின் கருத்துக்கள் எவராலும், என்றும் மறுக்க முடியாதன. அதன் வழி ஒழுகின் மக்கள் வாழ்வு சிறப்புறும்."

பின்னர் தலைவர் தமது முடிவுரையில் எல்லோரும் தமிழினை நன்கு கற்கவேண்டுமென்றும், ஒழுக்கமுடையவர்களாக வாழ வேண்டுமென்றும், உண்மைத் தத்துவங்கள் எளிய சொற்களில் அமையப்பெற்ற குறள்நெறியைப் பின்பற்றி அனைவரும் ஒழுகினால் இன்று நாட்டில் உள்ள பிணிகளனைத்தும் மறைந்துவிடும் என்றும் ஒவ்வொரு மாணவரும் மொழி, நாடு ஆகியவைகளில் பற்றுமிக்கவராகத் திகழவேண்டுமென்றும் கூறி முடித்தார். பின்னர் செயலாளர் நன்றி நவில விழா 8 மணிக்கு முடிவுற்றது.

முத்தமிழ் முறையினை ஒட்டி விழா நடைபெறத் திட்டமிடப்பட்டிருந்ததால் இரவு 9-30 மணிக்கு "மனோன்மணீயம் என்னும் நாடகம், காஞ்சி பச்சையப்பன் கல்லூரித்தலைவர் உயர்திரு M. சண்முகசுந்தர முதலியார் அவர்கள் M.A. L.T. எழுதிய உரையாடலைத் தழுவி, மாணவர்களால் சிறப்பாக நடிக்கப்பட்டது. அதுபோது நாடகத்துக்கு திருவையாறு வழக்கு மன்றத்தலைவர் உயர்திரு R. கிருஷ்ணமூர்த்தி B.A. B.L. தலைமை தாங்கினர். நாடகம் இரவு 2 மணிக்கு முடிவுற்றது. நாடகத்தில் சிறப்பாக நடித்த ஆ. இராமசாமி, V. நடேசன், சௌந்தரராசன், T. கணபதி, S. இராசு,

கோமதிசங்கரன், சயந்தீசுவரன் ஆகியோருக்கு வெள்ளிப் பதக்கங்கள் வழங்கப்பட்டன. இவற்றுள் முறையே முதற்பதக்கம் கல்லூரித் தலைவராலும், இரண்டாவது மூன்றாவது பதக்கங்களும், சிறப்புப் பரிசாக வழங்கப்பட்ட ஆறாவது ஏழாவது பதக்கங்களும், பேராசிரியர் த. சிவப்பிரகாசச் சேதுராயராலும், நான்காவது ஐந்தாவது பதக்கங்கள் கழகத்தாலும் அளிக்கப்பட்டன. இறுதியில் தலைவர் நடிகர்களைப் பாராட்டிப் பேசினார்கள். பின்னர் செயலாளர் நன்றி நவில, வெள்ளிவிழா முத்தமிழ் விழாவாக இனிதே முடிவுற்றது.

இன்னணம்
**அ. துரைராசன்**
வித்துவான் 3-ம் ஆண்டு
செயலாளர்

---

# திருவள்ளுவர் தமிழ் மாணவர் கழக வெள்ளி விழாவினுக்கு வந்த வாழ்த்துக்கள்.

H. H. Kasivasi Arulnandi Tambiran Avl, Tirupanandal.
Wish Silver Jubilee celebration success.

---

**ஸ்ரீலஸ்ரீ அருணாசல தேசிக சுவாமிகள், திருவண்ணாமலையாதீனம், குன்றக்குடி.**

இக்கழகத்தின் வெள்ளி விழா நிகழ்வது குறித்து நிறைந்த மகிழ்ச்சி. திருவள்ளுவர் தண்டமிழ் நாட்டின் தெய்வப்புலவர். அவரின் திருக்குறள் உலகப் பொதுமறை. குறளின் கருத்துக்கள் மக்கள் மனதில் பதிந்தால் நாடு நல்ல பயனை அடையும். அத்திருத் தொண்டினை மாணவர்கள் செய்ய முன்வருவார்களாக.

---

**தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார்**

8. Constitution House, New Delhi.

திருக்குறள் வெறும் தத்துவம் அல்ல. உயர்வாழ்வும், நிறைந்த சக்தியும் வாழ்க்கையில் வெற்றியும் பெற விரும்புவோர் தினசரி வாழ்க்கையில் பின்பற்றவேண்டியது.

---

**C. Vedachalam B. A., B L. Municipal Commissioner, Salem.**
**Wish Jubilee grand success.**

---

**கோ. வில்வபதி, அமைச்சர், மாணவர் மன்றம், சென்னை.**

அரசர் கல்லூரி இக்காலத் தமிழ்ச் சங்கமென விளங்குகின்றது. எண்ணற்ற தமிழ்ப் புலவர்களைத்தந்து இக்கல்லூரி செய்து வரும் சீரிய தமிழ்ப் பணிக்குத் தமிழகம் என்றும் நன்றி பாராட்டுங் கடமையுடையதாகும். இக்கல்லூரியை தமிழ் நாட்டிற்குதவிய Sir A. T. பன்னீர்செல்வம், த. வே. உமாமகேசுவரம் ஆகியோரை இந்நேரத்தில் நினைக்கும் கடமையிலுள்ளோம்

சென்னை மேயர் செங்கல்வராயன் நாவீறு படைத்தவர். சிறந்த தமிழ்த் தொண்டர். அத்தகையவரின் தலைமையில் விழா எல்லா வகைகளிலும் வெற்றியுடன் முடிய மாணவர் மன்றச்சார்பிலும், பழய மாணவன் என்ற முறையிலும் என் வாழ்த்துக்களைக் கூறுகின்றேன்.

---

**அ. கணபதி, சிவ. தட்சிணாமூர்த்தி, கரந்தை தமிழ்ச்சங்கம்.**

வெள்ளிவிழா சிறப்பாக நடைபெறவும், கழகமும், திரிசாரணர் படையும் வளர்ந்தோங்கவும் திருவருளை வழுத்துகின்றோம்.

---

**பு. சி. புன்னைவனநாதன், திருநெல்வேலி, தென்னிந்திய தமிழ்ச்சங்கம்.**

வெள்ளி விழா நிகழ்ச்சிகள்யாவும் இனிது நிறைவேற விழைகின்றேன்.

---

**திருவள்ளுவர் கழகத்தார், திருத்தவத்துறை. (லால்குடி)**

நும் கழகம் மேன் மேலும் செழிப்புற வளர்ந்து சிறப்புற்றோங்க எல்லாம் வல்ல இறைவனருளை மனம், மொழி, மெய்களால் நாடுகின்றோம்.

---

**கி. ஆ. பெ. விசுவநாதம், திருச்சி.**

உயர்ந்த தலைவரின் தலைமையின் கீழ் சிறந்த பேச்சாளர் சொற்பொழிவோடு முதிர்ந்த கழகத்தின் வெள்ளிவிழா நடப்பதை வந்த அழைப்பால் அறிந்து மகிழ்ந்தேன். விழா வினிது நடைபெறவும், வள்ளுவர் நெறி நின்று நிலைபெறவும் கல்லூரி சிறப்படையவும், கழகம் செழிப்படையவும் ஆசைப்படுகின்றேன்.

---

**உ. பழநி M. A., கரந்தைப் புலவர் கல்லூரித் தலைவர்.**

வெள்ளிவிழா அழைப்பிதழ் கிடைக்கப்பெற்றேன். விழா இனிது நிறைவேறுவதாக.

---

**S. உருத்திரபதி, M. A., தமிழ்த்துறைத்தலைவர், மத்தியக் கல்லூரி, பெங்களூர்.**

வெள்ளிவிழா பொன்விழாவாக இனிது நிறைவேற ஐயாற் றுறை ஐயன் அருள் புரிவானாக.

---

**Dr. மா. இராசமாணிக்கம் M. A., Ph. D, விவேகானந்தர் கல்லூரி, சென்னை.**

ஆட்சித் திறமையிலும் ஒழுக்கத்திலும் சிறந்த உயர்திரு. பழநியப்பன் அவர்கள் தலைமையில் விழாநடத்தலே அறிய மகிழ்ச்சி. பல்கலை அறிஞர் Dr. அ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் பேச இசைந்தது மாணவர்கள் செய்த பேறு. வெள்ளிவிழா இனிது நிறைவேறுவதாக.

---

**A. S. நாராயணசாமி M. A., விருதுநகர்.**

விழாவிற் கலந்து கொள்ளும் புலவர்கட்கும் செயற்குழுவின ருக்கும் எனது நன்றி. திருவள்ளுவர் தமிழ்மாணவர் கழகம் மேன் மேலும் வளர்ந்து தமிழ்ப் பணி புரிவதாகுக.

---

**வி. அ. பரிமேலழகர், தூய சூசையப்பர் கல்லூரி, திருச்சி.**

இருநாள் விழாவிலும் அறிஞர்களது கருத்துரைகள் நமது முன்னேற்றப் பாதைக்குத் துணைபுரிவதாக. தமிழுக்கு நல்ல எதிர் காலம் வந்து கொண்டுள்ளது. தமிழாட்சி வள்ளுவர் வகுத்த வழி யில் இலங்க நம் கழகம் வழி வகுப்பதாக.

---

**மு. அருணாசலம் பிள்ளை, விரிவுரையாளர், அண்ணாமலை நகர்.**

விழா நிகழ்ச்சிகள் செவ்வனே நடைபெறத் திருவருள் சுரக் கும் வண்ணம் ஐயாறப்பன் அடிகளை அகத்தாலும் புறத்தாலும் வழிபட்டு வாழ்த்துகின்றேன்.

---

**R. சோமசுந்தரன், விரிவுரையாளர் க. செ. கல்லூரி, மேலைச்சிவபுரி**

அள்ளுதிற தமிழ்மொழியின வளங்க ளெல்லாம்
அள்ளியள்ளி யெமக்களித்த அறிவுச் செல்வீ !
தெள்ளியநல் லுரைபயிற்றி எமைவ ளர்த்துச
சீராட்டிப் புகழ்பரப்பும் செவிலித் தாயே !

வள்ளுவர்மா ணவர்கழக மென்னும் அன்றாய் !
வளம்பெறுமுன் வெள்ளிவிழாச் சிறப்புற் றோங்க
வெள்ளிமலை மீதன்றி யென்று மெத்தும்
விரும்பியுறை பரம்பொருளை வேண்டு கின்றேன்.

---

**ப. உருத்திரமணி, அரசினர் கல்லூரி, கோவை.**

*நாட்டுப்பணியிலே நாட்டங்கொண்டு, இயல், இசை, நாடகம் இனிய முறையில் வளரச்செயல் மேற்கொண்டு, மொழிவளம் பெறவும், தமிழர் வாழ்வில் ஒளி விளங்கவும், உழைக்கின்ற இளைஞரை எண்ணிப் பெருமிதமடைகின்றேன். தமிழ்ச் சான்றோர் நெறிநின்று அன்னார் வெற்றிபெறவும் விழா இனிது நிறைவேறவும் வாழ்த்துகின்றேன்.*

---

**தி. கி. சுந்தரமூர்த்தி, பசுமலை (மதுரை)**

*தமிழ் வாழ்வே தம் வாழ்வெனக்கொண்டு விளங்கும் தலைவரும் அவர் தம் அருமை மாணவர்களும், உள்ள மயக்கோட்டி, உணர்வூட்டி நன்னெறிகாட்டும் வள்ளுவர் கழகமும் வாழ்க ! வாழ்க !! என ஆதிபகவன் நற்றாளைப் போற்றுகின்றேன்.*

---

**வை. குஞ்சிதபாதம், நுங்கம்பாக்கம், சென்னை.**

*வெள்ளி விழா தமிழ் விழாவாக இனிது நிறைவேறுவதாக.*

**நா. சிவராம முத்துக்குமாரவேல், தமிழாசிரியர், தேனி.**

முப்பால் பருகி, முதுசெந் தமிழ்மொழிந்தே
இப்பாரில் வெள்ளிவிழா எய்திநிற்கும்—செப்புகின்ற
ஐயாற்று மாணவர்கள் அன்பார் தமிழ்க்கழகம்
வையமிசை வாழ்க ! வளர்ந்து.

---

**நாக. சண்முகம், மேலைச்சிவபுரி.**

*காவிரிக்கரையில் கவின்பெறு அரங்கில் கவிநயமுடையார் பேச்சில் புவிபுகழ்செல்வர் இசையில், போற்றிடத்தகும் மாணவர் கூத்தில் விளங்கிடும் வெள்ளிவிழா இனிது நடைபெறுவதாக என மனமுவந்து வாழ்த்துகின்றேன்.*





'மனோன்மணீயம்' நடிகர்கள்



வெள்ளி விழா—கழகத்தலைவரும்
மாணவர் செயற்குழுவினரும்.



சரபோஜி திரிசாரணர் குழு.



விளையாட்டு வீரர்கள்.

# " சரபோஜி சாரணர் குழு "

## அரசர் கல்லூரி, திருவையாறு.



காவிரிக் கரையிலே செந்தமிழும், வடமொழியும் செம்மையுறப்பயில, உண்டியும் உறையுளும் உவந்தளித்து, மங்காப் புகழ் பெற்ற மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் பெயரால் நம் கல்லூரியின் தலைவர் உயர்திரு, பெ. திருஞானசம்பந்தம் M.A., L.T. அவர்களால் முதன் முதல் ஓர் சாரணர் குழு 2—10—1949ல் தோற்றுவிக்கப்பட்டது பின்னர் சென்னை மாநில சாரணத் தலைமை நிலைய முதன் ஆணையாளர் அவர்களின் ஒப்புதலை 1949-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9-ஆம் நாள் பெற்றது. 1949ம் ஆண்டு முதல் 53 வரையில் சாரண ஆசிரியர்களாகவும், தலைவர்களாகவும் அமைந்தோர் கீழ்வருமாறு:—

| ஆண்டு | சாரண ஆசிரியர் | சாரணத் தலைவர் | சாரணர் தொகை |
|---|---|---|---|
| 49—50 | திரு. புலவர் வி. அ. அரங்கசாமி | வில்சன் தனராசு | 44 |
| 50—51 | ,, | ,, | 44 |
| 51—52 | திரு. S.பாலசுப்பிரமணியன் (Sec. Gr. Asst.) | வேங்கடராமன் அண்ணாமலை | 26 |
| 52—53 | ,, | P. பாலசுப்பிரமணியன் G. வைத்தியலிங்கம் | 26 |

இச்சாரணர் குழு 18—1—53 இல் The Bharat Scouts and Guides, Madrasஇன் ஒப்புதலைப் பெற்றது. சாரணர் அனைவருக்கும் இளம்பாதர் பயிற்சிக்குப் பின் Tender foot Badge அளிக்கப் பெற்றுள்ளது. இச்சாரணர் குழு, தொடக்கம் முதல் இன்று வரை பயிற்சி வகுப்பு நடாத்தல், பாடித்தீ அமைத்தல், பல்வகை விளையாட்டுக்களைக் காண்பித்தல், சுதந்தர நாள், குடியரசு நாள், கழக ஆண்டு விழா நாள், தியாகையர் விழா நாள் போன்ற நாட்களில் பணி செய்தல் ஆகிய தம் கடமையைச் செப்பமுறச் செய்துவந்துள்ளது. இவ்யாண்டு இருபது பயிற்சிக் கூட்டங்களும் ஆறு சிறப்புக் கூட்டங்களும் நடைபெற்றுள்ளன. சிறப்புக் கூட்டங்களில் தலைமை ஏற்று அறிவுரை பகர்ந்தோர் திரு பெ. திருஞானசம்பந்தம் M. A., L. T. அவர்கள், திரு. புலவர். T. சிவப்பிரகாச சேதிராயர் அவர்கள், திரு. புலவர். N. இராமசாமி அவர்கள், திரு. H. வேங்கடராமன் அவர்கள், திரு. இராமநாத ஐயர் B.A., L.T. அவர்கள் ஆவார்கள்.

இச்சாரணர் குழு, டால்மியாபுரம், திருவரங்கம், திருவானைக்கா, திருச்சி ஒலிபரப்பு நிலையம், மலைக்கோட்டை, திருவாரூர், நாகை, வேளாங்கண்ணி, நாகூர், காரைக்கால் ஆகிய இடங்களுக்கு கல்லூரி மாணவர்களுடன் இன்பச் செலவு சென்று வந்துள்ளது. மேலும் திங்களூர், கொள்ளிடம் ஆகிய இடங்களுக்குச் சென்று பாடித்தீஅமைத்து சேரிக்குச்சென்று அடிப்படைக் கல்வி முறையிலே நின்று பல் வகைத் தொண்டுகளை செய்து காண்பித்துள்ளது. இக்குழு, தஞ்சை மாவட்டத் திரிசாரணர்களால் நடத்தப்பட்ட நிகழ்ச்சிகளிலும் இந்திய திரிசாரணியத் தலைவர் தஞ்சை வந்த பொழுது நடந்த நிகழ்ச்சிகளிலும் கலந்து பணியாற்றியுள்ளது. தியாகராயர் இசை விழாவைத் திறந்துவைத்த அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் திரு வேங்கடசாமி நாயடு அவர்களும் முன்னாள் சென்னை மேயர் திரு. இராமசாமி நாயடு அவர்களும் நம் சாரணர் குழுவின் தொண்டினைப் போற்றி மணிமொழிகள் வழங்கியுள்ளனர்.

**ஆண்டு விழா 8—3—53.**

*தலைவர்:*

உயர்திரு. A. Y. S. பரிசுத்த நாடார் அவர்கள்.

*சொற்பொழிவாளர்:*

உயர்திரு. வித்துவான் கு. பாலகிருட்டினன் M.A., L.T. (District Rover-Leader) அவர்கள்.

8—3—53 மாலை 4 மணிக்கு 'தேநீர் விருந்து' நடைபெற்ற பின் 'ஒளியுருவப் படம்' எடுக்கப்பட்டது.

4-30க்கு பாடித்தீ (Camp Fire) அமைத்து கூடாரம் இட்டு, சாரணர் மற்றவர்களை மகிழ்ச்சியிலாழ்த்தினர்.

சாரணப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்கள்:-

| | | |
|---|---|---|
| Memory Test:— | 1. | N. இராமலிங்கம் |
| | 2. | K. சுப்பிரமணியன் |
| Musical Chair:— | 1. | V. நடேசன் |
| | 2. | N. சுப்பிரமணியன் |
| Pot race: — | 1. | N. சுப்பிரமணியன் |
| | 2. | N. இராமசாமி |

வெற்றிபெற்றவர்களுக்குத் தலைவர் அவர்கள் பரிசு வழங்கினார்கள்.

சொற்பொழிவாளர் அவர்கள் 'சாரணர் கடமை' குறித்தும், சாரணீயம் வளர்ச்சியடைய வேண்டியதன் அவசியத்தைக் குறித்தும், பல இலக்கியங்களிலிருந்து மேற்கோளுடன் வற்புறுத்திப் பேசினார்கள்.

இறுதியாக மாலை 6 மணிக்கு சாரண ஆசிரியர் திரு. S. பாலசுப்ரமண்யம் நன்றி கூறியபின் 'ஜனகணமன' தேசிய கீதத்துடன் விழா இனிதே முடிவுற்றது. இக்குழுவை ஊக்கிய கல்லூரித் தலைவருக்கும், இயக்கிய சாரண ஆசிரியருக்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

ப. பாலசுப்பிரமணியன்,
சாரணத் தலைவன், வித்துவான் இறுதிநிலை

---

## விளையாட்டுக் குழு

உடலினை வளர்த்து உறுதிப்படுத்துவது விளையாட்டே. உடம்பை வளர்த்தோனே உயிரை வளர்த்தோன் என்றார் சான்றோரும். இவ்வாண்டு எங்கள் கல்லூரி விளையாட்டுகளில் பெரியதொரு முன்னேற்றத்தைக் காட்டியுள்ளதெனில் அதற்குக் காரணம் கல்லூரித் தலைவர் உயர்திரு. திருஞானசம்பந்தம் M. A., L. T. அவர்களின் மனமார்ந்த ஆசியுடன் கூடிய மெய் முயற்சி என்பது எளிதின் விளங்குவதாகும். இவ்விளையாட்டுகளை ஒவ்வொரு ஆண்டிலும் ஒவ்வொரு பேராசிரியர் முன்னின்று கண்காணித்து வந்துள்ளனர். இவ்வாண்டு இவ்விளையாட்டுக்களைக் கண்காணித்து மாணவர்கள் ஊக்கமுடனும் ஒற்றுமை மனப்பான்மையுடனும் செயலாற்ற முன்னின்று சலியாது உழைத்தவர் கல்லூரிப் பேராசிரியர் உயர்திரு வி அ. அரங்கசாமி அவர்கள் ஆவார்கள். மேலும் கல்லூரி விளையாட்டுத் தலைவர் (Captains) களின் திறமை சீரியதொன்றாம்.

இவ்வாண்டு எங்கள் கைப்பந்து (Volley Ball) குழுவினர் இவ்வூர் உயர்நிலைப் பள்ளியுடனும், திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த வெள்ளனூர் விளையாட்டுக் குழுவினருடனும் விளையாடி வெற்றி கண்டுள்ளனர். அண்மையில் குடந்தை அரசினர் கல்லூரி விளையாட்டுக்குழுவினரிடம் விளையாடி வெற்றியுறுவிடினும், செம்மையான முறையில் நின்று விளையாடியது பாராட்டுதற்குரியது. எங்கள் பூப்பந்து (Badminton) குழுவினர் இவ்வூர் உயர்நிலைப் பள்ளியினருடன் பலமுறை விளையாடி, அம்மாணவர்களுக்கு நல்ல பயிற்சி தந்ததோடு, அவர்களை எங்கள் கல்லூரிக்கழைத்து, வெற்றி

யுங்கண்டுள்ளனர். கும்பகோணம் சென்று ஆண்டைக்கல்லூரிக் குழுவினருடன் விளையாடியுள்ளனர். எங்கள் கல்லூரியில் வளையப் பந்தும், சுவற்றுப்பந்தும் (Ring Tennis, Wall Tennis) மிகுதியான மாணவர்களால் விரும்பி விளையாடப்பட்டு வருகின்றன. நீளத்தாண்டுதல், உயரத்தாண்டுதல், தடைநீக்கி ஓடுதல் (Obstacle Race) முதலிய போட்டிகளையும் எங்கள் கல்லூரி நடத்தியுள்ளது. அப்போட்டிகளில் பல மாணவர்கள் கலந்துகொண்டு பரிசுகளைப் பெற்றுள்ளனர். நடந்த போட்டியும், கலந்து கொண்டு வெற்றி பெற்ற மாணவர்களும்:—

| போட்டி | முதல் தரம் | இரண்டாம் தரம் |
|---|---|---|
| பூப்பந்து (இருவர்) முதுபருவம் | C. இராசகோபாலன் | S. ஐயாறு |
| | A. துரைராசன் | K. V. பொன்னுசாமி |
| ,, இளம்பருவம் | N சுப்பிரமணியன் | V. சுதர்சனம் |
| | R. சின்னத்தம்பி | K. இராமதாஸ் |
| ,, (ஒருவர்) | S. ஐயாறு | C. இராசகோபாலன் |
| கை உந்துபந்து | S. ஐயாறு | T. V. சீநிவாசன் |
| | C. இராசகோபாலன் | N. கோடிப்பிள்ளை |
| | N. இராமலிங்கம் | D. இராமலிங்கம் |
| வளையப்பந்து | R ஜனார்த்தனம் | K. இராமதாஸ் |
| | K. நாராயணசாமி | N. திருநாவுக்கரசு |
| நீளத்தாண்டுதல் | P. சுப்பிரமணியன் | N. அண்ணைசாமி |
| உயரத்தாண்டுதல் | T. V. சீநிவாசன் | S. ஐயாறு, C. இராசகோபாலன் |
| தடைதாண்டி ஓடுதல் | C. இராசகோபாலன் | P. சுப்பிரமணியன் |

போட்டிகளில் கலந்துகொண்ட மாணவர்களுக்கும் விளையாட்டுகளை நடத்த ஊக்கிய எங்கள் கல்லூரித்தலைவர் அவர்கட்கும், எங்கள் விளையாட்டுகள் விரும்பப்படும் முறையிலே நடைபெற உழைத்த திரு. புலவர் வி. அ. அரங்கசாமி அவர்கட்கும், எங்கள் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

இங்ஙனம
S. ஐயாறு (Badminton Captain)
T. V. சீநிவாசன் (Volley Ball Captain)
P. கோமதிசங்கரன் (Ring Tennis Captain)
C. முத்துசாமி (Wall Tennis Captain)



# நன்றியுரை.

---

திருவள்ளுவர் தமிழ் மாணவர் கழகம் 19—7—1928இல் தோற்றமுற்று இவ்யாண்டோடு இருபத்தைந்தாண்டு நிறைவெய்தி வெள்ளி விழாக் கொண்டாடியுள்ளது. இவ்விருபத்தைந்தாண்டுகளிலே, அவ்வக் காலங்கட்கேற்ப ஊக்கமுடன் நின்று ஆக்கம் புரிந்து வரும் தலைவர்களுக்கும் செயலாளர்களுக்கும் (8-ஆம் பக்கம் காண்க) நிறைவேற்றுக் குழுவினருக்கும், தலைமைத் தமிழ்ப்பேராசிரியர்களாகவும் துணைத் தலைவர்களாகவுமமைந்து தொண்டாற்றிய திருவாளர்கள் M. S. சந்தானம் ஐயங்கார், L. உலகநாத பிள்ளை, அரங்க வேங்கடாசலம் பிள்ளை, பு. ரா. புருடோத்தம நாயுடு, இராம. கோவிந்தசாமி பிள்ளை ஆகியோருக்கும் கழகச் சார்பிலே நன்றி தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

இவ்வாண்டு வெள்ளி விழாவிலே கலந்து நின் கவிதை முதலியவற்றைத் திருத்திய பேராசிரியர்கள் இராம. கோவிந்தசாமி பிள்ளை, ந. இராமசாமிச் H. வேங்கடராமன் M. R. கிருட்டினமூர்த்தி ஆ திருத்தியும், அச்சகப்படிகளை ஒப்பு நோக்கியும், செ பேராசிரியர் திரு. வி. அ. அரங்கசாமியவர்கட்கும் கு நன்றி தெரிவித்துக்கொள்ளுகின்றேன். விழா நாடக பட நடத்திக்கொடுத்த துணைத்தலைவர் திரு. S. T. யார், பேராசிரியர் திரு. த. சிவப்பிரகாசச்சேதிர யாசிரியர் திரு. T. P. திருஞானசம்பந்த தேசிகர் ஆ எங்கள் நன்றி உரித்தாகும்.

இக் கழகமும், வெள்ளி விழாவும், சீரிய செம்மையுற நடாத்தற்கு ஒரு பெருங் கருவியாக கல்லூரித் தலைவர் திரு. பெ. திருஞானசம்பந்தம் M. கட்கும், விழாச் சிறப்புற அமைதற்குப் பல்லாற்றா பல புரிந்த மாணவ உறுப்பினரனைவருக்கும் விழு கொண்டு சிறப்பித்த அறிஞர்கட்கும் ஏனைய அனைவ சார்பிலே நன்றி தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

வணக்கம்!

அ.



